நீங்களே கண்டுகொள்ளுங்கள்

# மின்னலடிக்கும், ஸூப்பர் ரின் வெண்மை.. இதர டிட்டர்ஜெண்ட் வில்லை, பார் எதனையும் மிஞ்சும் வெண்மை







வேலை தவறாமல் உபயோகியுங்கள் ஸூப்பர் ரின். எத்தகைய வெள்ளைவெளேர் சலவை கிடைக்கிறது பாருங்கள்—இதர டிட்டர்ஜெண்ட் வில்லை, பார் எதனையும் மிஞ்சும் வெண்மை அது. காரணம், மேம்பட்ட வெளுப்பூட்டும் சக்தி அடங்கியது ஸூப்பர் ரின். நீங்களே கண்டுகொள்ளுங்கள்.




**இதர டிட்டர்ஜெண்ட் வில்லை,பார் எதனையும்'விட அதிக வெளுப்பூட்டும் சக்தி.**

லின்டாஸ்-RIN 34-3317 TH (R.R.)

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

# Kalki Shopping Page

# Kalki Shopping Page

# ஸ்டாண்டர்ட்

## உங்கள் வீட்டில் ஒரு மினி அரங்கு வைத்து இருக்கும் பெருமிதத்தை அடையலாமே-ஸ்டாண்டர்ட் டிவி வைத்து இருப்பதின் மூலம்




இது சாத்யமே. காரணம் ஸ்டாண்டர்டு டிவியில் எங்களது பலவருட நுட்பமான அறிவுத்திறனும், தரக்கட்டுப் பாட்டுக்கு உட்பட்ட பல சிறந்த உறுப்புக்களின் சேர்க்கையுமே காரணம். உங்கள் மனம் விரும்பும் மிகச்செவ்வனே செய்த டிவி இது ஒன்றுதான் அது நிச்சயம் எங்களுககு தெரியும்.

வாங்கிய பின் நீங்களும் உணர்வீர்கள்.

பெயருக்கு ஏற்றதரமுள்ள டிவி: **STANDARD TV**

**T. V. HOUSE**
61, IV Avenue Ashok Nagar
Madras-600 083
Ph: 423056, 423561

**R. A. E. C.**
85, Mount Road (Next to Buhari) Madras-600 002
Ph: 810237

**SARI GANESHRAM ELECTRONICS**
178, M. S. Koil Street
Madras-600 013
Ph: 554960

---

## HMV STEREO 1010



Rs 1443/-
Max. Rec. Ret. Price incl. Excise Duty. Taxes extra.




**HMV STEREO SYSTEMS**

## HMV STEREO POPULAR II



Rs. 1,037/-
Max. Rec. Ret. Price incl. Excise Duty. Taxes extra.




**HMV STEREO SYSTEMS**

*Available at :*

**ANNY-N-SUNNY**
269-A, Crosscut Road,
Coimbatore-641 012 Ph: 33276

**ELECTRONIC SERVICES**
215,-A, Jail Road,
Coimbatore-641 018 Ph: 24535

**PUJAK & CO**
260, Avanashi Road,
Coimbatore-641 018 Ph: 25335

**K. S. SHETTY & CO**
42, State Bank Road,
Coimbatore-641 018 Ph: 23944

ரப்பர் கலந்த நார் மெத்தைகள்

இல்லங்களுக்கும் ஹோட்டல்களுக்கும்
மிகச் சிறந்தவை... சிக்கனமானவை.



பந்து போல் எழும்பும்
தன்மையுடைய
ஃபைப்ரோபிளெக்ஸ்
உங்களுக்கு முழுமையான
சுகமளிப்பதுடன் மிகச்
சகாயமான விலையில்
கிடைக்கின்றன.

சோர்ந்து போன தசை
களுக்கு புத்துணர்வூட்டும்
ஃபைப்ரோபிளெக்ஸ்
மெத்தைகள் நீங்கள்
ஆனந்தமாக உறங்க
உங்கள் உடலுக்கு
தேவையான இதமளிக்க
வல்லது.

ஃபோம் மெத்தைகளை விட
ஃபைப்ரோபிளெக்ஸ் விலை
மிக மிகக் குறைவு

FIBROFLEX
Rubberised Coir
MATTRESSES,
PILLOWS and CUSHIONS

தயாரிப்பாளர்கள்:
பாரத் மோட்டார்ஸ்
151, மவுண்ட் ரோடு, சென்னை-600 002.
தொலைபேசி: 86203
ஷோரூம் மற்றும் விற்பனை:
37, கிரீம்ஸ் ரோடு, சென்னை-600 006.
தொலைபேசி: 86204

adsindia

சாதாரண தேங்காய் எண்ணெயைக் காட்டிலும் உங்கள்
கூந்தல் வளர்ச்சிக்குகந்தது எது?

## கேசவர்த்தினி

கலந்த தேங்காய் எண்ணெ!

ஆம்! நீங்கள் அன்றாடம் உபயோகிக்கும் தேங்காய் எண்ணெயுடன் சிறிது (சில சொட்டுகள்) கேசவர்த்தினி கலந்து தலையில் தடவிக் கொள்ளுங்கள். உங்கள் கூந்தல் எழில் மிளிர காண்பீர்கள்.

அழகிய அடர்த்தியான கூந்தலின் பரம்பரை ரகசியம் — கேசவர்த்தினி. ஒரு பாட்டில் இன்றே வாங்குங்கள்.

கேசவர்த்தினி ப்ராடக்ட்ஸ்
சென்னை– 600 087

OBM 4926 TM







# ஸி.பி.க்கு நூறு !

"நாள் முழுதும் அபத்த உரைகளைக் கேட்டுக் கொண்டிருப்பதைவிடச் சற்று நேரம் நான் அபத்த உரை நிகழ்த்தி விட்டுப் போவதையே விரும்புகிறேன்" என்று சென்னை பிரதம நீதிபதிக்கு நகைச்சுவையாகக் கடிதம் எழுதி நீதிபதி பதவியை மறுத்து வழக்கறிஞராகவே விளங்க விருப்பம் தெரிவித்தவர் மேதை ஸி. பி. ராமசாமி ஐயர். இது 1919ம் ஆண்டில் நிகழ்ந்தது.

இவ்வாண்டு நவம்பர் 13ம் தேதியன்று டாக்டர் சி. பி. ராமசாமி ஐயரின் நூறுவது பிறந்த நாள்.

1879ம் ஆண்டு வட ஆர்க்காடு வந்தவாசியில் தீபாவளியன்று முன்னாளைய சிட்டி சிவில் நீதிபதி திரு ஸி. ஆர். பட்டாபிராமனுக்கு ஒரே மகனாகப் பிறந்தார் ஸி. பி.

பிரசிடென்ஸி கல்லூரியில் பி. ஏ. படிக்கையில் கணிதம், சம்ஸ்கிருதம், ஆங்கிலம் ஆகிய மூன்று பாடங்களிலும் மாநிலத்தில் முதன்மையாக வந்து தங்கப்பதக்கம் வாங்கியது இவரது மேதாவிலாசத்துக்கு முன்னோடியாக அமைந்தது.

வழக்கறிஞராகி, ஜே. கிருஷ்ணமூர்த்தி வழக்கில் டாக்டர் பெஸன்டுக்கு எதிராக வழக்காடின இவர், பிற்பாடு அவருடன் நெருங்கிப் பழகி ஒத்துழைத்தது சிறப்பான அம்சம். வ. உ. சி.யின் கப்பல் கம்பெனிக்காக டாக்டர் பெசன்ட், பாரதியார், சுப்பிரமணிய சிவா, வ. உ. சி. ஆகியவர்களுடன் இணைந்து பணியாற்றியவர்.

அகில இந்திய ஹோம் ரூல் லீக்கின் காரியதரிசி, இந்திய தேசிய காங்கிரஸின் காரியதரிசி பதவி, ஜவாஹர்லால் நேருவுடன் இணை காரியதரிசியாகப் பணியாற்றியது ஆகியவை இவரது ஆரம்ப காலச் சிறப்புக் கட்டங்கள்.

'ரிட்' போடும் வழிமுறையை முதன் முதலாகச் சென்னை உயர்நீதி மன்றத்துக்கு 1919ல் கொண்டு வந்தார். 1920ல் சென்னை மாநிலத்தின் அட்வகேட் ஜெனரல் பதவியை வகித்தார்.

1923 முதல் 1928 வரை சென்னை அரசாங்க எக்ஸிக்யூடிவ் கவுன்ஸிலில் சட்ட அங்கத்தினராக இருந்தபோது இவரது முயற்சியின் அடிப்படையில்தான் மேட்டூர், பைகாரா, பவானி திட்டங்களும், கொச்சின், தூத்துக்குடி, விசாகப்பட்டின துறைமுகத் திட்டங்களும் உருவாயின.

1936 முதல் 1947 வரை திருவிதாங்கூர் திவான் பதவியை வகித்தபோது அவர் செய்த சிறப்பான காரியங்கள் இன்றைக்கும் வழிகாட்டியாக உள்ளன. தீண்டாமை ஒழிப்பில் தீவிரமாக இருந்தார். சி. பி.யின் தூண்டுதலால் திருவிதாங்கூர் மகாராஜா ஆலயப் பிரவேசத்தை அமல்படுத்தினார்.

முதன் முதலில் சாலைப் போக்குவரத்தைத் தேசிய மயம் ஆக்கியது, மரண தண்டனையை முதன் முதலாக ஒழித்தது, வயது வந்தவர்களுக்கு ஓட்டுரிமை அளித்தது, முதன் முதலில் ஏழைப் பள்ளி மாணவர்களுக்கு இலவச மதிய உணவு அளிக்கும் முறையைப் புகுத்தியது ஆகிய பெருமைகள் திருவிதாங்கூர் திவான் சி. பி. அவர்களைச் சாருகிறது.

சுதந்திரத்துக்குப் பின் அண்ணாமலை சர்வ கலாசாலை, பனாரஸ் சர்வ கலாசாலை ஆக இரண்டிலும் ஒரே சமயத்தில் துணைவேந்தர் பதவியை வகித்தார். இப்பெருமையைப் பெற்ற ஒரே மேதை ஸி. பி.தான். சர்வ கலாசாலைப் பட்டமளிப்பு விழாப் பேருரைகளை மிக அதிகமான தடவைகள் நிகழ்த்தும் பெருமை பெற்றவரும் இவர்தான்.

தமது எண்பத்து ஒன்பதாவது வயதிலும் ஓய்வாக இராமல் தாம் எழுதிக்கொண்டிருந்த 'A History of my Times' என்ற புத்தகத்துக்குத் தகவல் திரட்டவும், மகாத்மா காந்தி இன்ஸ்டிட்யூட்டில் உரைகள் நிகழ்த்தவும் இவர் லண்டன் சென்றிருந்த போது தமது நாற்காலியில் அமர்ந்தவாறே காலமானார்.

இறக்கும் வரை அறிவாற்றலை விருத்தி செய்துகொள்ளும் பணியிலே ஈடுபட்டிருந்த இவரைப் போன்ற மேதைகளைக் காண்பது அபூர்வம்.

1969ம் ஆண்டு, அவரது நண்பர்கள் ரசிகர்கள் ஒருங்கிணைந்து டாக்டர் ஸி.பி. ராமசாமி ஐயர் நிறுவனம் என்னும் கலை, கல்வி ஸ்தாபனத்தை ஏற்படுத்தினர். பல



விடங்களில் இந்நிறுவனம் நற்பணிகள் ஆற்றி வருகிறது.

சேஷஸாயி நிறுவனத்தைச் சார்ந்த எஸ். விஸ்வநாதனைக் கௌரவ காரியதரிசியாகவும், சித்ரா நாராயணசாமியைத் தலைவராகவும், ஸி. பி. யின் மூத்த புதல்வர் ஸி. ஆர். பட்டாபிராமனைத் துணைத் தலைவராகவும் கொண்டு ஸி. பி. பௌண்டேஷன் செயல்படுகிறது. ஸி. பி.யின் நூறுவது ஆண்டைச் சிறப்பாகக் கொண்டாடப் பயனுள்ள பல திட்டங்களைத் தீட்டியுள்ளது.

ஸி. ஆர். பட்டாபி ராமனைச் சந்தித்து அவரது தந்தையைப் பற்றிக் கேட்டபோது அவர் சொன்னது:

''என் தந்தை என்னுடன் நண்பர் போலத்தான் பழகுவார்! 1927ல் நான் இந்திய தேசிய காங்கிரஸ் சார்பில் சைமன் குழு பகிஷ்காரத்தில் பங்கேற்றேன். அப்போது அவர் அரசாங்க சார்பில் நிர்வாக அங்கத்தினர். என்னுடைய நடவடிக்கை பற்றி அரசாங்கம் அவரிடம் குறிப்பிட்ட போது, 'என் மகனுடைய சுதந்திரத்தில் நான் குறுக்கிட முடியாது. நாங்கள் இருவரும் இரு வேறு மனிதர்கள்.' என்று கூறி எனது சுதந்திரத்தில் குறுக்கிட மறுத்து விட்டார்!

''தமது அறுபதாவது வயது பூர்த்தியான போது, என்னையும் சகோதர, சகோதரிகளையும் அழைத்து, தமது மொத்த சொத்தையும் பிரித்துக் கொடுத்து விட்டார். 'என்ன தப்பு செய்து விட்டோம்?' என்று எங்களுக்குள் தவிப்பு.

'' 'நீங்கள் எந்தத் தவறும் செய்யவில்லை: இவ்வாறு பிரித்துக் கொடுப்பது என் கடமை' என்று அவர் சொன்னது எங்களை நெகிழச் செய்து விட்டது.

''என் சார்புக்கு வந்த இந்தக் ''குரோவ்'' பங்களாவையும், நிலத்தையும் நான் ஸி.பி. ராமசாமி ஐயர் நிறுவனத்துக்கே நன்கொடையாக அளித்துவிட்டு நான் இதில் தங்கி இருப்பதற்காக நிறுவனத்துக்கு வாடகையும் அளித்து வருகிறேன்.'' என்று குறிப்பிட்டார் பட்டாபி ராமன். 'அப்பாவுக்கு ஏற்ற பிள்ளை' என்று எண்ணிக் கொண்டே விடைபெற்றேன்.

— ரங்கா

---

## ரயிலை வென்ற குதிரை!

இந்தியாவில் ரயில் பாதைகள் போட்டுக் கொண்டிருந்தார் கர்சான் பிரபு: 'டிகம்கார்,' மகாராஜாவான பிரதாப் சிங்கிடம் - அவரது சமஸ்தானத்தில், நான்கு ரயில்வே ஸ்டேஷன்கள் கட்ட வேண்டும் என்று கூறினார்!

மகாராஜா அனுமதியளிக்கவில்லை! கர்சான்பிரபு,''மிகவேகமாகப் போகும் ரயில்கள் உங்களுக்கு வேண்டாமா?'' என்று ஆசை காட்டினார்! பிரதாப் சிங்,''என்னுடைய குதிரையை விடவா உங்கள் ரயில் வேகமாகப் போகும்?'' என்று கேட்டார்!

கர்சான் பிரபு, ''நிரூபிக்கிறேன்'' என்றார்!ஒரு பந்தயம் ஏற்பாடாயிற்று! டிகம்காருக்கும் கரோண்டாவுக்கும் இடையில் சுமார் 43 கி-மீ தொலைவு ரயிலையும் மகாராஜாவின் குதிரையையும் (அதன் பெயரும் மகாராஜாதான்) ஓட விட்டனர், இந்த ரேஸில்-குதிரை தோற்றால்-ரயில்வே ஸ்டேஷன்கள் கட்டுவது! ரயில் தோற்றால், கர்சான் பிரபு-நடையைக் கட்டுவது-என்று முடிவாயிற்று! ரயில் வேகமாக ஓடியது! மகாராஜா, அதை விட வேகமாக ஓடியது! ஜெயித்தது! அதுவும் எப்படி? பாதிதூரம் இடைவெளியில் — ஏறத்தாழ. குதிரை 43 கி. -மீட்டரைக் கடந்து எல்லையைத் தொட்டுவிட்ட போது, ரயில் இருபத்தாறுவது கிலோ மீட்டரில் வந்து கொண்டிருந்தது! அதன் பிறகு டிகம்காருக்குத் திரும்பும் போது அந்த மகத்தான சாதனை புரிந்த மகாராஜா ஓர் எலுமிச்சை மரத்தின் அடியில் மாண்டு விழுந்தது! மகாராஜா பிரதாப் சிங், அவ் வீரப் புரவிக்கு அங்கேயே பளிங்குச் சிலை நிறுவினர்! அன்றிலிருந்து மக்கள் அச்சிலைக்கு அஞ்சலி செலுத்தலாயினர்!

—தஞ்சை மணியன்





# வைரங்கள்

## மன நிறைவுகளும் ஏக்கங்களும்!

• மர்மங்களையும் யதார்த்தத்துக்கு ஒத்து வராத உத்திகளையும் கையாண்டு செக்ஸைச் சாமர்த்தியமாகத் தெளித்து எழுதப்படும் நாவல்கள் என்றென்றைக்கும் களிப்பூட்டுவனவாக மாத்திரமே இருக்க முடியும். அந்தப் பிரிவில் வரும் சுஜாதா, அர்த்தமுள்ளதாக இரண்டு நாவல்கள் எழுதியிருக்கிறார். ஒன்று 'ஜன்னல் மலர்' மற்றொன்று 'வைரங்கள்'. மலரை விட வைரம் கெட்டிதான்!

ஜோலார்பேட்டை மூ. செல்வபாண்டியன்

• ''வைரங்க''ளின் ஜொலிப்பில் ஜெயராஜின் படம் பளபளவென்று மின்னி என் இதயத்தைக் கவர்ந்ததற்கு நான் என்னதவம் செய்தேனோ?

வேலூர் (சேலம்) லட்சுமி செங்குட்டுவன்

• பதின்மூன்றே அத்தியாயத்தில் இப்படிப்பட்ட வைரத்தைப் போன்ற, அருமையான, நிறைவான கதையை சுஜாதாவால் மட்டுமே தரமுடியும். காதர்! உள்ளத்தின் அடித்தளத்தை உணர்ச்சியுடன் தொட்ட ஆழமான படைப்பு! என் சொந்தத் தம்பியைப் பிரிந்தால் கூட இவ்வளவு துயரம் ஏற்படாது!

பாண்டிச்சேரி கே. ராம்குமார்

• ஆசைப்பட்டோருக்குக் கிடைக்காமலும், அடைந்தவர் அதைப் பற்றி அறியாமலும் போகின்ற சூழ்நிலை 'இதுதான் உலகம்' என்பதை உணர்த்துகிறது.

வைரங்கள் கதையில் எளிமையும் வேகமும் சுஜாதாவின் எழுத்தாற்றலை நிரூபிக்கின்றன.

பூவை விமலன்

• சுஜாதாவின் ''வைரங்கள்'' கோகினூர் வைரமாக ஜொலிக்காவிட்டாலும் 'காதர்' கையில் கிடைத்த வைரமாக ஜொலித்தது. முடிவைச் சிறு சிறு வாக்கியங்களிலேயே புரிய வைத்து முடித்திருப்பது பாராட்டுக்குரியது.

விருத்தாசலம் எம்.எஸ். சையத் அலி

• சுஜாதாவின் வைரங்கள் நன்கு ஜொலித்தது. அவர் நடையில் இலக்கிய நயம் (rather unusually) மிகுந்திருந்தது. பாத்திரங்களின் படைப்பில் உயிர் இருந்தது. சித்திரிக்கப்பட்ட சம்பவங்களில் நிஜம் வாழ்ந்தது. ஆனால் சீக்கிரம் முடிந்ததில் ஏக்கம் உண்டாகிறது.

மதுராந்தகம் ஆர். நவஜீவராஜன்

• ஒரு காதருக்கு மட்டும்தான் இந்த நிலையா? இல்லை, நாட்டில் பல ஆயிரம் காதர்களுக்கு; வைரங்கள் போன்றவர்களுக்கு இந்தக் கதிதான்! இந்த நாடு என்றுதான் உருப்படுமோ?

மன்னார்குடி அஜீதா

• கொங்கு நாட்டில் வைரங்கள் நிலத்தடியில் இருக்கிறதோ இல்லையோ, சுஜாதாவால் பட்டை தீட்டப்பட்டு ஜொலித்த 'வைரங்களை' மறக்க முடியாதபடி செய்துவிட்டார். அவருக்கே உரித்தான பாணியில் கதையை 'டப்'பென்று முடித்துவிட்டார். இன்னும் சில வாரங்கள் தொடர்ந்திருக்கலாமே!

சிறுமுகை கண்ணன்

• 'ப்ளக்' என்று விழுந்து மூழ்கிய அந்த இரண்டாவது வைரக் கல்லோடு எங்கள் எதிர்பார்ப்புகளையும் மூழ்கடித்துவிட்டாரே!

சென்னை 12 வி. சந்திரசேகரன்

• புற்றீசல்கள் போல் வாரப் பத்திரிகைகள் கிளம்பிக் கொண்டிருக்கும் இந்த நேரத்தில் சுஜாதா போன்ற எழுத்தாளர்களுக்குக் கிராக்கியும் போட்டியும் இருப்பது இயல்பு. அதற்காக அழகாக எழுதி வந்த ஒரு தொடர் கதையை இப்படி நிறுத்த வேண்டிய நிர்ப்பந்தம் உங்களுடையதா? அல்லது அவருடையதா?

இவ்வாறு வாசகர்களின் வெறுப்பைச் சம்பாதிக்க வேண்டாம்.

சென்னை-40 வே. நடராஜன்

[வைரங்கள் தொடர்கதை சீக்கிரமாக முடிந்துவிட்டதே என்று வருத்தப்பட்டும், கோபத்துடனும் ஏராளமான வாசகர்கள் எழுதியுள்ளார்கள். வைரம் சிறிதாக இருந்தாலும் அதன் மதிப்பு மிகுதி அல்லவா? சுஜாதா இந்தத் தொடர் கதையை ஆரம்பிக்கும்போதே மூன்று மாதங்களுக்குத்தான் திட்டம் போட்டிருப்பதாகத் தெரியப்படுத்தியிருந்தார். அதன்படியே எழுதினார். இருப்பினும் வாசகர்களின் ஏக்கத்தை அவருக்குத் தெரியப்படுத்தியுள்ளோம். கூடிய விரைவில் நீண்ட தொடர்கதை எழுதுவார் என்று எதிர்பார்க்கலாம்.

—ஆசிரியர்]




# உத்தரமேரூர் உத்தமத் தேர்தல் முறை

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சிகாமகோடி சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி சங்கராசாரிய ஸ்வாமிகள்

இப்போது அந்த நாள் எலெக்ஷனில் ரொம்பப் புதுமையான, முக்கியமான விஷயத்தைச் சொல்கிறேன் அது என்னவென்றால் அபேக்ஷகர்கள் என்பதாகச் சில பேர் இந்தத் தேர்தலில் நின்று வோட் கேட்பது என்பதே கிடையாது. ''இதென்ன இப்படிச் சொல்கிறாரே; இத்தனை நாழி ஜனநாயகத் தேர்தல், மெம்பரின் யோக்யதாம்சம் என்றெல்லாம் நீட்டி முழக்கிச் சொல்லி விட்டு 'காண்டிடேட்' (அபேக்ஷகர்) என்று யாரும் 'கன்டெஸ்ட்' பண்ணவில்லை (போட்டியிடவே இல்லை) என்கிறாரே'' என்று தோன்றலாம். ஜனநாயக முறையில் தேர்தல் நடந்தது வாஸ்தவம்; தேர்ந்தெடுக்கப்பட்டவர்களுக்கு ஏகப்பட்ட யோக்யதாம்சங்கள் நிர்ணயித்திருந்ததும் வாஸ்தவம். ஆனாலும் ''நான் நிற்கிறேன்'' என்று எவரும் அபேக்ஷகராகப் போட்டி போட்டுப் பிரசாரம் பண்ணுவது கிடையாது.

பின்னே எப்படித் தேர்தல் நடந்தது என்றால்; மநு, மாந்தாதாவின் காலத்திலிருந்து வந்திருக்கிற தர்ம சாஸ்திரத்தை அநுஸரித்த யோக்யதைகளையே மநுநீதிச் சோழனின் பரம்பரையினரும் பொது நிர்வாக அங்கத்தினர்களுக்கு உரியனவாக வைத்து விட்டார்கள். இவற்றைத்தான் மேலே பார்த்தோம். இந்தத் தகுதிகள் எல்லாம் உள்ள எவனானாலும் அவன் நிர்வாகத்துக்கு வந்தால் ஸரியாகத்தான் நடப்பான். ஒரு கிராமத்திலுள்ள ஜனங்களிடம், ''நான் இப்படியாகப்பட்ட யோக்யதாம்சங்கள் உள்ளவன்'' என்று ஒரு தர்மிஷ்டன் சொல்லிக் கொண்டு 'கன்டெஸ்ட்' பண்ணாவிட்டாலும், அவர்களுக்காகவே தங்களுக்கிடையில் இப்பேர்ப்பட்டவர்கள் யார் யார் இருக்கிறார்கள் என்று தெரியுமல்லவா?'' இன்னார் நல்ல யோக்யதை உள்ளவர்; குணத்திலும் நல்லவர்; புத்திசாலித்தனமும் உள்ளவர்; காரிய ஸாமர்த்தியமும் உள்ளவர்; இவரிடம் நிர்வாகப்பொறுப்பைத் தரலாம்'' என்று ஜனங்கள் தாங்களாகவே சில பேரைப் பற்றி நினைப்பார்கள் அல்லவா? இப்படி ஒவ்வொரு வோட்டரும் எவரைப் பற்றி நினைக்கிறாரோ அவர் பெயரை ஓலை நறுக்கில் எழுதி 'வோட்' பண்ணிவிட வேண்டும். அபேக்ஷகர்கள் என்று பல பேர் போட்டி போட்டு, வாய்ச் சண்டை, கைச் சண்டை, லஞ்ச ஊழல் என்றெல்லாம் ஏற்படாமல், ஜனங்களாகவே தங்களுக்குப் பிடித்தவர்கள் பெயருக்கு 'வோட்' பண்ணுவதாக அக்கால முறை அமைந்திருந்தது.

இன்னொரு முக்யமான அம்சம், இந்த வோட்டுக்களை எண்ணி மெஜாரிட்டி — பேஸிஸில் (பெரும்பான்மை அடிப்படையில்) ஒருத்தர் ஜயித்ததாக நிர்ணயம் பண்ணுவது தான். ஒருத்தன் மெஜாரிட்டி அடிப்படையில் ஜெயிக்கிறான் என்றால் உடனே அவனுக்கும் அவனை ஆதரிப்பவர்களுக்கும், எதிராளிகளான மைனாரிட்டி யார் யார் என்பதிலேயே புத்தி போகும். அவர்களை எப்படியெல்லாம் ஹிம்ஸிக்கலாம் ('விக்டிமைஸ்' பண்ணலாம்) என்பதில் கவனம் போகும். மைனாரிட்டியின் பரம நியாயமான கோரிக்கைகளைக் கூட மெஜாரிட்டி பலத்தினால் திரஸ்காரம் பண்ணி விடுவது என்று இக்காலத்தில் ஏற்பட்டிருக்கிற மாதிரி கூடாது என்று நம் சோழ காலப் பூர்விகர்கள் எண்ணியிருக்கிறார்கள். அதனால் யோக்யதாம்சங்களைத் திட்டவட்டமாக, நிர்ணயமாக வைத்துவிட்ட பின், அப்படிப்பட்டவன் மெஜாரிட்டி பெற்றானா, மைனாரிட்டி பெற்றானா என்ற வீண் சண்டைகளைக் கிளப்பி விடாமல், தேர்ந்தெடுக்கப் பண்ணினார்கள்! இதற்குத்தான் குடவோலை முறை என்று பெயர். இது எப்படி செயல்பட்டது, பார்ப்போம்.

(தொடரும்)


கொள்கைகள்
ஜனதா (எஸ்)
காங்கிரஸ் (அ)
கொள்கைகள்


இந்திரா
ஜனதா
காங்கிரஸ் (அ)
இ. காங்கிரஸ்


நீங்க தான் பிரதமர்! அதோ நிக்கறாரே, அவர் தான் துணைப் பிரதமர்!
சாமி ஜோசியம்
என்னய்யா பெரிய ஜோசியம்? எங்க கலைஞரை துணைப் பிரதமர்னு சொல்லி அவமானப்படுத்திட்டியே!...
உடன்பிறப்பு




# கல்கி

1979 நவம்பர் 11
சித்தார்த்தி ஐப்பசி 25
மலர்: 38 இதழ்: 15




தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

# நயினார்தாஸ் அவர்களே!

கருணாநிதி அவர்களே! 'போலீஸ் கிளர்ச்சிக்கும் எனக்கும் சம்பந்தம் கிடையாது: திமுக அதனைத் தூண்டிவிடவோ வளர்க்கவோ இல்லை' என்று சொல்கிறீர்கள். ரொம்பச் சரி, ஆனால் 'இந்தக் கிளர்ச்சி வேண்டாம்' என்று அறிவுரையாக ஒரு வார்த்தை நீங்கள் சொல்லவில்லையே, ஏன்?

போலீஸ் கிளர்ச்சியைத் தூண்டிய அரசியல்வாதிகளே! நீங்கள் யாராயிருந்தாலும் சரி, தமிழகத்துக்கும் தமிழக போலீஸாருக்கும் மாபெரும் துரோகம் இழைத்து விட்டீர்கள். எங்கள் கண்களில் படாமல் நீங்கள் மறைந்திருந்தாலும் தலைகுனியத்தான் போகிறீர்கள்.

தற்போது ஜாமீனில் விடுதலையாகி வெளியே வந்திருக்கும் நயினார்தாஸ் அவர்களே! கிளர்ச்சியை நிறுத்துங்கள் என்று நீங்கள் அறிக்கை விட்ட பிறகும் நீங்கள் சிறையில் இருந்தால் சில விஷமிகள் அந்த அறிக்கை நிர்ப்பந்தத்தின் பேரில் பெறப்பட்டது என்று திரித்துக் கூற முடியும், எனவேதான் ஜாமீனில் வெளியே வருவதாகச் சொல்லியிருக்கிறீர்கள். உங்களது இந்த மனமாற்றம் நீடிக்கட்டும். உங்கள் வாக்குறுதியை நூறு சதம் காப்பாற்றித் தாருங்கள். போலீஸ் கிளர்ச்சிகள் ஒருவாறு பல இடங்களிலும் அடங்கி சகஜ நிலைமை ஏற்பட்டு வருகிறது. இந்த அபிவிருத்தி நீடித்துக் காவல் துறை பூரண ஆரோக்கியம் பெறட்டும். கைது செய்யப்பட்டவர் அனைவருமே விடுதலை பெறுமாறு நல்ல சூழ்நிலையைத் தோற்றுவிக்கப் பாருங்கள்.

எங்களையும் எங்கள் சொத்து சுதந்திரங்களையும் காத்தருளும் காவலர்களே! உங்களுக்குக் குறைகள் இருக்கலாம். குறைகள் இல்லாத மனிதன் உலகில் யார்? அந்தக் குறைகள் சாத்தியமான அளவில் நீக்கப்படவும் வேண்டும்தான். குறைகளை அரசின் கவனத்துக்குக் கொண்டுவர உங்களுக்கு ஓர் அமைப்பும் தேவைதான். ஆனால் அது மற்ற துறைகளில் உள்ள தொழிற்சங்கங்கள் போல் செயல்படக் கூடாது. அரசியலை மறந்துபோயும் அதில் நுழைய விடாதீர்கள். காவல் துறையில் போட்டிச் சங்கங்கள் பேரபத்தானவை என்பதைத் தயவு செய்து உணருங்கள். தொழிற்சங்கம் என்ற பெயரே உதவாது. 'காவலர் நலன் அமைப்பு' என்பது போல் ஏதாவது ஒரு பெயர் சூட்டுங்கள். இந்த அமைப்பில் பூரண சுதந்திரத்துடன் உங்கள் தலைவரை, காரியதரிசியைத் தேர்ந்தெடுங்கள். அவர்கள் உங்கள் நலனுக்காக அரசுடன் அமைதியாகப் பேச்சு வார்த்தைகள் நடத்தட்டும். மக்கள் அபிப்பிராயத்தையும் உருவாக்கட்டும். இதை விடுத்து கிளர்ச்சி, வன்முறை என்று ஆரம்பிப்பது யாருக்குமே நல்லதல்ல என்றால் போலீஸ் துறையிலோ கடுமையான கண்டனத்துக்கே உரியது. போலீஸ் இலாகாவில் சேரும்போதே 'இது ஒரு புனிதப் பணி. இதில் ஈடுபடும்போது சில பல தியாகங்களுக்கு நாம் தயாராக இருக்க வேண்டும்' என்ற எண்ணம் உங்கள் மனத்தில் தோன்றியிருக்க வேண்டுமே? வேலியே பயிரை மேய்ந்தால் நாங்கள் யாரிடம் போய் முறையிடுவது?

தமிழகத்தில் ஆட்சி பீடத்தில் அமர்ந்திருப்பவர்களே! உங்களுக்கும் ஒரு வேண்டுகோள். காவலர் விஷயத்தில் மெத்தனமாய் இருக்காதீர்கள். அவர்களது நியாயமான குறைகளை அவ்வப்போது உடனடியாகக் கவனித்து நிவாரணம் அளியுங்கள். அவர்கள் சங்கங்கள் அமைத்துப் போராட்டங்களில் ஈடுபடக் கூடாது, முடியாது என்பதாலேயே அவர்கள் கோரிக்கைகள் அலட்சியத்துக்கு உள்ளாகிவிடக் கூடாது. காவல் துறையில் லஞ்சம் என்ற அநாகரிகம் எட்டிப் பார்க்கவும் கூடாது எனில் அவர்கள் வாழ்க்கைத்தரம் ஓரளவேனும் உயர்ந்து நிற்க வேண்டும் என்பதை உணருங்கள்.

# முற்றுப் பெறாத வாக்கியங்கள்

மதனு மிருத்தியுஞ்சயன்

### முன்கதை

கந்தா அழகி; விநோத் அழகன். இருவரும் காதலர்கள். விநோத் துப்பறியும் நிபுணன். தங்கள் திருமணத்துக்குப் பெற்றோரின் அனுமதி பெறக் காத்திருக்கும் காதல் ஜோடிகள். விநோத் பெங்களூர் செல்கிறான்; அங்கே நீல்கமல் ஒரு கால் கேர்ள். கடத்தல் காரப் பெரும் புள்ளிக்காகப் பல பணமுதலைகளைத் தன் அழகினால் அமுக்கிப் போட்டவள். வைர வியாபாரியாக நடிக்கிறான் விநோத். அவனுக்கு உபசாரனை செய்ய நீல்கமல் அனுப்பப்படுகிறாள் "பாஸி"னால். நீல்கமலுடன் சினிமா பார்த்துக் கொண்டிருக்கும் போது அவனுக்கு எச்சரிக்கை ரகசியமாக ஒயர்லெஸ் கருவி மூலம் வருகிறது. நீல்கமலின் வலைக்குள்ளிருந்து விடுபட்டுப் போலீஸ் காரில் ஏறி விரைகிறான்.

## அத்தியாயம் 2

விநோத் திடீரென்று தியேட்டரை விட்டுக் கிளம்பியதும் ஒரு கணம் என்ன செய்வது என்று புரியாமல் மயங்கி நின்றாள் நீல் கமல்.

'படம் முடியும்வரை அவனைத் தியேட்டரில் 'என்கேஜ்' செய்ய வேண்டும்' என்பது அவளுக்கு இடப்பட்ட கட்டளை.

அதனைச் சரிவரச் செய்யவில்லை என்று குற்றம் சாட்டி ஏதேனும் தண்டனை கொடுப்பானே கூட்டத் தலைவன் என்று அவளுக்குக் கிலி.

தியேட்டரை விட்டு விரைவாக வெளியே வந்தாள்.

விநோதின் கார் தியேட்டர் காம்பவுண்டைத் தாண்டி வெளியே போவது தெரிந்தது.

வெளியே காத்திருப்பதாகச் சொன்ன ஜோஸைத் தேடினாள்.

காணோம்.

'டீ சாப்பிடப் போயிருப்பானோ என்னவோ!' என்று அவளுள் யோசனை.

தெருவுக்கு வந்து பார்வையை இருபுறமும் செலுத்தினாள்.

'என்ன நீல் கமல், படம் பார்க்காம வெளியே வந்து நிக்கறே? ஆள் உள்ளாற இருக்கானா?' என்ற குரல் கேட்டுத் திரும்பினாள்.

ஜோஸ்தான் நின்று கொண்டிருந்தான்.

''ஜோஸ்.... ரொம்ப அவசரம். அந்த ஆள் திமிர்னு வெட்டிக்கினு கிளம்பிட்டான். எவ்வளவோ சொன்னேன்: அர்ஜண்டா வேலை இருக்கு. நானே ரூமுக்கு வான்னு சொல்லிட்டுக் கிளம்பிட்டான்.''

''ஒரு பாட்டில் பீர் குடிக்கலாம்னு இப்பத்தான் 'பார்' உள்ளே போனேன். நீ என்ன பொம்பளே... ஆளைக் கோட்டை விட்டுட்டயே... அவன் பாட்டுக்கு நேரா ஹோட்



டல் ரூமுக்குப் போறான்னு நம்ப டேவிட் ரூம்ல இருப்பானே... மாட்டிண்டான்னு எல்லோரும் கம்பி எண்ண வேண்டியதுதான்!''

''ஜோஸ்... எனக்கு ஒண்ணும் புரியலே. நீ ஏதாவது செய்யேன்....'' நீல் பதறினாள்.

''நீ பாட்டுக்குக் கோட்டை விட்டுடறது. அதைச் சரிக்கட்ட வழி சொல்லி உன்னைக் காப்பாத்தணும். எப்பவாவது கொஞ்சம் என்னையும் கவனிச்சுக்கோன்னா மட்டும் 'சீ அசிங்கமா பேசாதே'ன்னு சிடுசிடுப்பே இல்லே!''

''உனக்கு எப்பவுமே இதே புத்திதானா?.. அந்த ஆள் கறுப்பு அம்பாஸிடர்லே போறான். மொதல்லே அவனைப் போய்த் தொத்து....''

''அப்ப நானேக்கு வீட்டுக்கு வரவா.''

''நீ இப்போ கிளம்பு. நானே விவகாரத்தை அப்புறமாப் பார்த்துக்கலாம்...''

''எந்த வழியாப் போறான்?''

''எனக்கென்ன தெரியும்? வெளியே வந்து பார்த்தா வண்டி போறது தெரிஞ்சுதே. வெளியே காத்திருந்து கண்காணிக்கச் சொன்னா நீ பீர் குடிக்கப் போயிட்டே...''

''ஏய் நீ படா பொம்பளை... என்னமா மாத்தறே. உங்கிட்ட நானேக்கு வெச்சுக்கறேன்...''

ஜோஸ் வண்டியில் வேகமாகக் கிளம்பினான்.

'செவன் ஹெவனை' நோக்கி விநோத் பறந்து கொண்டிருந்தான்.

தன் கைப்பெட்டியும் வயர்லெஸ் கருவியின் மறு முனையையும் ரகசிய முறையில் இணைத்திருந்தான்.

எவனோ தன் அறையைத் திறந்து கைப்பெட்டியை உடைத்துத் திறந்திருக்க



வேண்டும். அதனால்தான் 'சிக்னல்' வேலை செய்திருக்கிறது.

அறைக்குச் சென்று அவனைக் கையும் களவுமாகப் பிடித்தால் நிறைய விஷயங்கள் வெளி வரலாம்.

எண்ணத்தில் ஆழ்ந்தபடி ரேஸ் கோர்ஸ் சாலை வழியாக வண்டியை ஓட்டிச் சென்ற போதுதான் வினோத் சற்றுத் தள்ளிப் பின்னால் வரும் காரைக் கவனித்தான்.

முதலில் அவனுக்குச் சந்தேகம் தோன்றவில்லை.

போகப் போக அந்தக் கார் தன்னைத்தான் துரத்துகிறது என்பது அவனுக்குப் புரிந்தது.

என்ன செய்யலாம் என்று ஒரு கணம் அவனுள் யோசனை.

தனது காரின் வேகத்தைக் குறைத்து அக்காரை முன்னே போகச் செய்ய முயற்சி செய்தான்.

அந்தக் காரின் வேகமும் குறைந்தது.

ஒரு பெட்ரோல் பங்க் வர, பெட்ரோல் போடும் சாக்கில் வண்டியை நிறுத்தினான்.

தூரத்தில் அக்காரும் நின்றது.

பெட்ரோல் போட்டுக் கொண்டு காரைக் கிளப்பி 'செவன் ஹெவன்' ஹோட்டல் நோக்கிச் செலுத்தாமல் சென்னை போகும் நெடுஞ்சாலையை நோக்கி ஓட்டலானான்.

'துரத்துபவனை ஊருக்கு வெளியே இழுத்துத்தான் செல்ல வேண்டும்' என்று தனக்குள் எண்ணிக் கொண்டான்.

வண்டி ஓடிக் கொண்டிருந்தது.

பின்னால் அவனும் சீராகத் துரத்திக் கொண்டு வந்தான்.

திடீரென்று விநோத்தின் உள்ளத்தில் ஓர் எண்ண ஓட்டம்.

'இங்கு வீணாகும் ஒவ்வொரு நிமிடமும் எதிரிக்குச் சாதகம். தன் அறையில் இருக்கும் எதிரியின் ஆள் தான் தாமதமாகப் போனால் தப்பி ஓடி விடுவான். அதை மனத்தில் கொண்டுதான் இவனும் தன்னைத் துரத்துவதாகப் போக்குக் காட்டிக் காலத்தை நீட்டுகிறான்' என்று விநோத்திற்குத் தோன்றியது.

ஒரு திருப்பம்.

பிரிந்து செல்லும் ஒரு கிளைச் சாலை.

நேராக வண்டியைச் செலுத்தாமல் பிரிந்து செல்லும் கிளைச் சாலையில் காரைச் செலுத்தி வேகமாக ரிவர்சில் வந்து காரைத் திருப்பிப் பிரதான சாலைக்கு வந்து, பின் தொடர்ந்துவரும் காரை நேருக்கு நேர் சந்திக்கும் விதமாக வந்தான்.

பின்தொடர்ந்து வந்த ஜோஸப்புக்கு ஒரு கணம் திகைப்பு. இவன் என்ன செய்யப் போகிறான் என்று புரியாத மயக்கம். காரை நிறுத்தினான்.

எதிரியின் அந்த ஒரு கண நேர மயக்கத்தைப் பயன்படுத்திக் கொண்டுவிநோத்தன் பாக்கெட்டிலிருந்து ரிவால்வரை எடுத்துக் காரின் முன் பக்கச் சக்கரங்கள் இரண்டையும் குறிவைத்துச் சுட்டு 'பங்சர்' செய்து மின்னலெனத் தன் காரைச் செலுத்தி, அந்தக் காரைத் தாண்டி வேகமாக சிட்டியை நோக்கிப் பறந்தான்.

இந்தப் பரபரப்பில் ரிவால்வர் நழுவிக் காரின் உள்ளே கீழே விழுந்ததைக் கவனிக்கவில்லை.

பதினைந்தாவது நிமிடத்தில் விநோத் 'செவன் ஹெவன்' அருகில் இருந்தான்.

ஹோட்டலுக்குப் பின்புறத் தெருவிலேயே காரை நிறுத்திவிட்டு ஹோட்டலின் பின் பக்க மதில் சுவரைத் தாண்டிக் குதித்து, பின் வாசல் வழியாகவே வந்து உள்ளே பிரவேசித்தான்.

தூரத்தில் ரிஸப்ஷனிஸ்ட் அரைத் தூக்கத்தில் ஆடிக் கொண்டிருந்தது கண்ணில் பட்டது.

லிஃப்டை உபயோகிக்காமல் படி வழியாகவே தனது அறை இருக்கும் நாலாவது மாடியை அடைந்தான்.

அவன் தங்கியிருப்பது என்னவோ 110ம் நம்பர் அறை ஆனாலும், வேறு பெயர்களில் 109, 111ம் நம்பர் அறைகளும் இவனுக்காகவே எடுக்கப்பட்டுக் காலியாக இருந்தன. இவ்விவரம் ஹோட்டல் நிர்வாகிக்குக் கூடத் தெரியாது.

தன் அறை வாசலில் நின்று சுற்று முற்றும் பார்த்தான்.

எவரும் இல்லை.

சாவித் துவாரத்தில் கண் வைத்துப் பார்த்தான்.

எதிரி புத்திசாலியாக இருக்க வேண்டும். சாவித் துவாரத்தை எதனாலேயோ உள் பக்கம் மூடியிருந்தான்.

109ம் நம்பர் அறைச் சாவியை எடுத்து அந்த அறைக் கதவைச் சத்தமிடாமல் திறந்து உட் பக்கமாகக் கதவைத் தாளிட்டுக் கொண்டான். விளக்கைப் போடாமல், 'பென் டார்ச்' உதவி கொண்டு ஜன்னல் அருகில் போய்ச் சப்தம் வராமல் ஜன்னல் கதவைத் திறந்தான்.

தனது அறையில் விளக்கு எரிவது தெரிந்தது.

கம்பி யில்லாத ஜன்னல்.

ஜன்னல் கட்டையில் ஏறித் தாண்டி, அதை ஒட்டியுள்ள சுவர்க் கட்டையைப் பற்றிக்கொண்டு மெதுவாக ஊர்ந்து தனது அறை ஜன்னல் கதவுப் பக்கம் வந்தான்.

கீழே ஐம்பதடி பாதாளம்.

சற்றுப் பிடி இளகினாலும், உயிர் உடலில் இருக்காது.

அழுத்தமாகப் பிடித்துக் கொண்டு ஜன்னல் கதவின் விளிம்பின் வழியாகப் பார்வையைச் செலுத்தியபோது—

அகலக் காலை விரித்தபடி ஒரு முரடன் இவன் பக்கம் முதுகைக் காட்டி உட்கார்ந்திருப்பது தெரிந்தது.

அவன் எதிரில் இவனுடைய சூட் கேஸ் திறந்து கிடக்க அதனுள் வைக்கப்பட்ட எல்லாப் பொருள்களும் தாறுமாறாய்ச் சிதறிக் கிடந்தன.

விநோத்தின் புகைப்படத்துடன் கூடிய 'ஐடென்டிஃபிகேஷன் கார்ட்' முரடன் கையில் இருந்தது. ஜன்னலைச் சத்தம் வராமல் முழுவதுமாக விநோத் திறந்தான். பாக்கெட்டில் கை விட்டவனுக்குப் பகீரென்றது. துப்பாக்கி இல்லை.

நிராயுதபாணியாகத்தான் எதிரியைச் சமாளித்தாக வேண்டிய நிலை.

ஜன்னல் கட்டையில் காலை வைத்து மெதுவாக உள்ளே இறங்கினான்.

இறங்கிய கோணம் சற்று அதிக சாய்வாக இருந்த நிலையில் ஒரு கால் வழுக்கிற்று.

பிடிமானத்துக்கு ஜன்னல் கதவுதான் கையில் கிடைத்தது. ஆனால் அது எழுப்பிய

"ரொம்ப காலமாய்க் குடும்பக் கட்டுப்பாட்டைப் பத்தியே எண்ணிப்பாக்காமல் இருந்தீங்களே... இப்போ திடீர்னு ஆபரேஷன் செஞ்சுக்க காரணம்?"

"குழந்தைகளை எண்ணிப் பார்த்து விட்டேன் தான்...!"

— கிரா மணாளன்



'கிரீச்' ஒலி முரடனை உஷார் படுத்தப் போதுமானதாக இருந்தது.

பாம்பு போல் பளீரென்று துள்ளி எழுந்து வினோதை எதிர் நோக்கும் விதமாக நின்று கொண்டான். கையில் பிச்சுவா.

வினோத் அவனை நோக்கி ஓர் அடி எடுத்து வைத்தான்.

''டேய் மரியாதையா அங்கேயே நில்லு. இன்னும் ஒரு அடி முன்னால் வந்தாலும் வயித்திலே செருகிடுவேன். ஜாக்கிரதை'' என்றான் முரடன்.

'ஹூம்...' என்ற சத்தத்துடன் வினோத் மின்னல் போல் டபீரென்று பாய்ந்து இடது காலால் பிச்சுவா பிடித்திருந்த முரடன் கையில் ஒரு 'கராத்தே கிக்கும்' கூடவே கை முஷ்டியால் முரடனின் தாடையில் ஒரு குத்தும் கொடுக்கவும் முரடன் நிலைகுலைந்தான். பிச்சுவா அறை மூலையில் போய் விழுந்தது.

ஆனால் முரடன் ஒரே வினாடியில் தன்னைச் சுதாரித்துக் கொண்டு வினோத்தின் மேல் பாய்ந்தான்.

அவ்வளவு விரைவில் தன்னைச் சரிப்படுத்திக்கொண்டு முரடன் தன் மேல் பாய்வான் என்று வினோத் எதிர்பார்க்காததால் அவனால் சரிசமமாக முரடனை எதிர்க்க முடியவில்லை.

வினோத்தின் அந்தக் கண பலவீனத்தைச் சாதகமாக்கிக் கொண்டு முரடன் சரமாரியாகக் குத்துக்கள் விட்டு வினோத்தைத் தாக்கவும் வினோத் தரையில் சரிந்தான்.

முரடன் வேகமாகத் திரும்பி அறை மூலையில் கிடந்த பிச்சுவாவை எடுக்கத் திரும்பிய போது வினோத் அவன் காலைத் தனது காலால் வாரிவிட முரடன், 'தடா'ரென்று குப்புற விழுந்தான்.

வினோத் எழுந்திருக்க முயன்றான். கால் மூட்டில் நல்ல அடி. உடனடியாக எழுந்திருக்க முடியவில்லை.

அதே சமயம் சமாளித்துக் கொண்டு எழுந்த முரடன் வினோத் எதிர்பார்க்காத ஒரு காரியத்தைச் செய்தான்.

நேராகக் கதவைநோக்கி முரடன் ஓடினான். தாழ்ப்பாளைத் திறந்து, கதவைத் திறந்து வெளியே போய் வெளிப்பக்கமாகக் கதவைச் சாத்தினான்.

வெளிப்புறம் தாழ்ப்போடும் சத்தமும் வினோத்துக்குக் கேட்டது.

வலியைச் சமாளித்துக் கொண்டு வினோத் எழுந்தான். முரடனைத் தப்பவிட்டுவிட்டோமே என்கிற ஆதங்கம் அவனுள்.

கதவு வெளிப்புறம் தாழ்ப்பாள் போடப்பட்டு விட்டதால் மறுபடியும் ஜன்னல் மீதேறி 109ம் நம்பர் அறைக்குள் நுழைந்து வெளியே வந்தான்.

லிஃப்ட் முதல் மாடியிலேயே நின்று கொண்டிருப்பதை 'சிக்னல் லைட்' காட்டியது. பட்டனை எத்தனை தடவை அழுத்தினாலும் அது மேலே வரவில்லை. படியில் நொண்டி நொண்டிக் கீழே இறங்கினான்.

கீழே வந்தபோது வாசலில் எந்தச் சந்தடியையும் காணோம்.

ரிசப்ஷனிஸ்ட் அப்போதுதான் உள்ளேயிருந்து வந்து தன் இருக்கையில் அமர்ந்து



''என் கணவரை யாராலும் 'பீட்' பண்ண முடியாது.''
''எதில்?''
''பீட் ரூட் அல்வா தின்பதில்!''

கொண்டான்.

''மேலேயிருந்து யாராவது கொஞ்சம் முன்னால் வந்து வெளியே போனார்களா?'' வினோத் கேட்டான்.

''ஒரு காப்பி சாப்பிட்டு வரலாம் என்று ஐந்து நிமிடம் முன்னால் உள்ளே போனேன். நான் இருந்தவரை எவரும் போகவில்லை'' என்று கன்னடம் கலந்த தமிழில் ரிசப்ஷனிஸ்ட் சொன்னான்.

அவனை அறையலாம் போல் இருந்தது வினோத்துக்கு.

ஹோட்டலிலிருந்து வெளி வந்து தெருவை நோக்கினான்.

எவ்விதச் சந்தடியுமின்றித் தெரு அமைதியாகத் தூங்கிக் கொண்டிருந்தது.

இவனைப் பார்த்து ஒரு சொறி நாய் குரைத்தது.

ஹோட்டலைச் சுற்றிக் கொண்டு பின் பக்கத் தெருவில் நிறுத்தியிருந்த தனது காரை நோக்கி வினோத் விரைந்தான்.

காரின் கதவுகள் திறந்து கிடந்தன.

குனிந்து 'ரிவால்வர்' விழுந்து கிடக்கிறதா என்று தேடினான். இல்லை.

காரில் ஏறி உட்கார்ந்துகொண்டு விளக்கைப் போட்டு காரை ஹோட்டலுக்கு முன் பக்கம் கொண்டு வர ஸ்டார்ட் செய்தான்.

காரின் சக்கரங்கள் 'பங்சர்' செய்யப்பட்டுக் கிடப்பது புரிந்தது.

திரும்பியவனுக்குப் பின் சீட்டில் ஒரு கடித உறை கிடப்பது சன்னலில் பட்டது.

அவசரம் அவசரமாகக் கடித உறையை எடுத்துப் பிரித்தான்.

''டேய் பொடியா!... உன்னை விட அப்பன் பாட்டன்களெல்லாம் எங்களிடம் மோதி எகிறிவிட்டனர். மரியாதையாக மெட்ராஸ் திரும்பி மூலையில் வாலைச் சுருட்டிக்கொண்டு கிட. இருபத்தி நாலு மணி நேரம் அவகாசம் தருகிறோம். திரும்பிவிடு. இல்லாவிட்டால் என்ன செய்வோம் தெரியுமா?... பொறுத்துப் பார்—''

''இன்னொரு சின்னத் தகவல்.''

''வேண்டாமே. நீயே நியூஸ் பேப்பரில் பார்த்துத் தெரிந்து கொள்வாய். என்ன போகப் போகிறாயா இல்லாவிடில்...''

கையெழுத்து இடாமல், முடிக்கப்படாமல் கடிதம் இருந்தது.

கடிதத்தைப் பாக்கெட்டில் வைத்துக் கொண்டு மெதுவாக அறைக்கு வினோத் திரும்பினான்.

அங்கே அவனுக்கு ஒரு ஃபோன் கால் காத்திருந்தது. (தொடரும்)




இந்த ஆத்தாவோட மனசை என்னும் புரிஞ்சுக்கவே முடியல. 'ஆம்பிளைத்தொணை! ஆம்பிளைத்தொணை!'ன்னு மாஞ்சுபோறாளே! என்ன சொகத்தைக் கண்டுட்டா ஆம்பிளைத் தொணையாலே? எந்தவிதத்தில் அது எங்களைக் காப்பாத்திச்சி!. வீடு விடாப் போயி ஒழைச்சி ஒழைச்சி ஓடாறதுதானே எங்களுக்கு விதிச்ச விதின்னு ஆயிடுச்சு!

அப்பாவுக்கு எங்கயோ தோட்ட வேலை. கெடைக்கிற காசையெல்லாம் குடிச்சுத் தொலைச்சிட்டு வீட்டில வந்து விழுந்து கெடக்கும். வீட்டுச் செலவுக்கு ஒரு பைசாகூட குடுக்காது.

ஆத்தா நாலஞ்சு வீடு செஞ்சிக்கிட்டிருந்திச்சு. நான் நாலஞ்சு வீடு. ஒருநாகூட நிக்காம, மாசம் முச்சூடும் பாடுபட்டாலும் நூறு ரூபாயைக்கூட கண்ணுல பாக்க முடியாதே! ஒழுகல் குடிசைக்கு இருவத்தஞ்சு ரூபா கொட்டியழணும் ராவுத்தருக்கு. மிச்சத்தை வச்சு எப்பிடித்தான் சாப்பிட்டமோ! பாதி நாளைக்குக் கொலை பட்டினிதான்! வேலை செய்யற வீட்டு மகராசிக மிச்சம் மீந்தது ஏதாச்சும் குடுத்தால் தான் உண்டு.

ஆம்பிளைத் தொணை! ஆம்பிளைத் தொணை! அப்பிடித் தன்னைத் தானே ஏமாத்திக்கறதுக்காக ஆத்தா என்னெல்லாம் சகிச்சுக்கத் தயாராயிருந்துச்சு! எனக்குக் கோவம் கோவமா வரும்.

அப்பாவை எந்த வகையில் சேக்கறதுன்னே எனக்குத் தெரியல. வீடு எப்பிடி நடக்குதுன்னு கவலைப்படாம விழுந்து கெடந்த ஆளுக்கு வீராப்பில மட்டும் கொறச்சல் கெடையாது. நான் பெரிய மனுஷி ஆனு என்ன? அதுக்காக சாங்கியமெல்லாம் செய்யணும்னு என்ன கட்டாயம்? ஆனு ஒண்ணிலேயும் கொறை வைக்காமெ நடத்தித் தான் ஆகணும்னு குதிச்சாரு அப்பா.

ஆத்தாவும் அப்பா பேச்சுக்கு ஒத்துப் பாடிச்சு. ஊரறிய சாங்கியம் செய்தாகணும். உறவுக் காரங்களையெல்லாம் அழைச்சி விருந்து வைக்கணும்: இருநூறு ரூபாயாவது இல்லாம நடக்குமா அதெல்லாம்?

வவுத்தைக் கட்டி வாயைக் கட்டி எறும்பு மாதிரி சேமிச்சு வைச்சிருந்த இருநூறு ரூபா இருந்த இடம் தெரியாம பறந்திடுச்சி. ஒறவுக் காரங்க எங்கிருந்து தான் வந்து மொளைச் சாங்களோ! என்னோட சாங்கியத்து சாக்கில கும்மாளம் போட்டுக் கூத்தடிச்சிட்டுப் போயிட்டாங்க.

அப்பா குஷிக்குக் கேக்கணுமா? ஜமா சேத்துக்கிட்டுப் புட்டி புட்டியா குடிச்சித் தீத்தாரு. அப்பிடியெல்லாம் ஆட்டம் போட்டால் தான் நான் பெரிய மனுஷி ஆனேன்னு ஒலகம் ஒத்துக்குமா? என்ன லாபம்! அப்பறம்தான் நான் வீடு விடா பத்துப் பாத்திரம் தேச்சுக் கூட்டி மெழுகப் போயிட்டேனே!

''என்னடி அதிசியமா இருக்கு! சாங்கியம் நடத்தி வருசம் ஒண்ணாகப் போகுது. யாருமே பொண்ணு கேக்க வரலியே!'' என்று அங்கலாய்த்தாள் ஆத்தா. இலவு காத்த கிளி!

ஆனு அப்பா கம்மா இல்லே. எனக்கு ஒரு ஆம்பிளையை அவருதான் இட்டாந்தாரு. அந்த ஆளோட பரட்டைத் தலையும் கிருதா மீசையும் பாக்கவே பயமா இருந்திச்சு. ஆத்தா கிட்ட மொறையிட்டேன்.

ஆனு ஆத்தாளெங்கே கேட்டுச்சி! பொண்ணு கேட்டு ஓர் ஆம்பிளை வீடுதேடி வந்திருச்சிங்கர கொண்டாட்டம் ஆத்தாவுக்கு!

''தா, நீ அறியாத பொண்ணு எந்த ஆம்பிளையைப் பார்த்தாலும் பயமாத்தான் இருக்கும். இந்த ஆளுக்கு என்ன குறைச்சல்! நல்லா சம்பாரிக்கிற கைன்னு பார்த்தாலே தெரியும் உனக்கு. ஒரு குறையும் இல்லாமே நல்லா வச்சுக்கும்! வேண்டாத ஆகாத்தியமெல்லாம் பண்ணிக் காரியத்தைக் கெடுத்திடாதே! அப்படின்னு என்வாயில் போட்டு அடக்கிடுச்சி!''

சம்பாதிக்கிற கைதான். அஞ்சும் பத்தும் இருவதும் முப்பதுமா அந்த ஆளு என் கையில கொண்டு வந்து கொடுத்த போது நான் பூரிச்சுத்தான் போனேன். இந்த ஆளைப் பத்தி எப்பிடித் தப்புக்கணக்குப் போட்டோம்னு என்னை நானே குட்டிக்கிட்டேன். சோத்துக்கும் துணிக்கும் பஞ்சமில்லே. வீடு விடா போயி சாக்கிரி வேலைசெய்யத் தேவை இல்லே. ஊர் சுத்த முடிஞ்சுது. சினிமா பாக்க முடிஞ்சுது. அம்மா சொன்னதில் தப்பில்லே. ஆம்பிளைத் தொணை ஆம்பிளைத் தொணைதான்!

ஒரு நா எனக்கு ஒரு தங்கச் சங்கிலியையே கொண்டு வந்து குடுத்திச்சு. ''உன் கழுத்துக்கு ஏத்ததாப் பாத்துப் பொறுக்கினேன். போட்டுக்க!'' அப்படின்னு கொஞ்சிக் கொழைஞ்சிது. போட்டுக்கிட்டா நல்லா இல்லாம எங்க போயிடும்! ''இருக்கட்டும் ஒரு நல்ல நாள்ல போட்டுக்கறேன்'' அப்படின்னு சொல்லிப் பொட்டிக்குள்ள பூட்டி வச்சிட்டேன். வியாசர்பாடிக் குப்பத்துக்கு நான் புதுசுதானே! தங்கச் சங்கிலியைப் போட்டுக்கிட்டு மினுக்கினு கண் வச்சுட மாட்டாங்களா!

''ஒம் புருசனுக்கு என்ன வேலை?'' — தண்ணி புடிக்கப் போன இடத்தில ஒருத்தி கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லத் தெரியல

எனக்கு. இத்தினி நாளும் அந்த ஆள்கிட்ட ஒரு வார்த்தை அதைப் பத்தி நான் கேட்டுக்கலியே. என்னமோ அந்தப் பொம்பிளே கேட்ட கேள்வி கிண்டல் பண்றமாதிரி எனக்குத் தோணிச்சி. அந்த ஆள் வரட்டும், கேட்டுத் தெரிஞ்சுக்கலாம்னு மனசில நெனச்சுக்கிட்டேன்.

ஆனா அந்த ஆளு அன்னிக்கு வரல. ராத்திரி முச்சூடும் தூங்காம முழிச்சிக்கிட்டிருந்தேன். அந்த ஆளு வரல, மறுநாளும் அப்பிடித்தான். மூணாம் நாள் போலீஸ்காரங்க வந்தாங்க. வீட்டைத் தாறுமாறாப் பெரட்டிச் சோதனை போட்டாங்க. பொட்டிக்குள்ள நான் வச்சிருந்த தங்கச் சங்கிலி அவங்க கண்ணிலே பட்டுது.

''ஏது சங்கிலி?''

''என் புருசன்தான் குடுத்தாரு.''

''பாவம் பொஞ்சாதி கிட்ட எவ்வளவு ஆசை!''

அவங்களோட கேலிச்சிரிப்பு என் நெஞ்சில நெருப்பை வாரிக் கொட்டறாப்பல இருந்திச்சி.

''வா, உன் புருசன் உனக்காகக் காத்திருக்காரு பாவம்!''

''எங்கே?''

''கூட வந்து பாரு தெரியும்.''

போலீஸ் வண்டில என்னையும் ஏத்தி அழைச்சுக்கிட்டுப் போனாங்க. போலீஸ் லாக்கப்ல அந்த ஆளெ வெச்சிருந்தாங்க. சம்பாரிக்கிற கை எப்படிப்பட்டதுன்னு புரிஞ்சு போச்சி. சிறுகச் சிறுக ஜேப்படி செய்தவரைக்கும் பிடிபடாம தப்பிக்க முடிஞ்சிச்சி. வாய் கொள்ளாம முழுங்க நெனைச்சதும் வசமா மாட்டிக்கிச்சி. கையும் மெய்யுமா போலீசல பிடிபட்டப்புறம் சும்மா விட்டுடுவாங்களா? ரெண்டு வருசத்துக்கு உள்ளே தள்ளிட்டாங்க. என்னையும் தொணைக்கு அனுப்பாம இருந்தாங்களே, அதுவே மேலு!

மறுபடியும் எங்க பழைய குப்பத்துக்கே வந்தாச்சி. ஆத்தா மொகத்தில ஈ ஆடல. எனக்கு விதிச்ச விதிக்கி யாரை நொந்து என்ன புண்ணியம்! போதாக் கொறைக்கு ஆறு மாதம் புள்ளெத்தாச்சி. அதோட மறுபடியும் வீட்டு வேலெ செய்யப் புறப்பட்டுட்டேன். ஆத்தா என்ன சொல்லியும் கேக்கல. வீட்டில வெட்டியா குந்தியிருக்க எனக்குப் புடிச்சாத்தானே!

பாவம், அப்பா திடீர்னு லாரியில் அடிபட்டுச் செத்துப் போவார்னு யாரு எதிர்பாத்திருப்பாங்க! குடிமயக்கத்திலே வீட்டுக்குத் திரும்பிக்கிட்டிருந்த போது லாரி அடிச்சிட்டுப் போயிடுச்சி. எனக்குப் புள்ளெபொறந்த ரெண்டாம் மாசம். அந்தப் புள்ளேபொறந்த வேளைதான் தாத்தாவை லாரி வாயில போட்டுக்கிச்சின்னு ஆத்தா அழுதா. என் புள்ளெ என்ன செய்யும்! குடி போதைக்கித்தான் அப்பா பலியாயிட்டார்னு ஆத்தாவுக்கு ஏன் புரியல?

அப்புறம் ரெண்டு மாசம் கூட ஆத்தா உயிரோட இல்லே. ஆம்பிளெத் தொணெ போனப்புறம் அவளுக்கு இந்த ஒலகத்தில இருக்கவே புடிக்கலியோ என்னவோ! அப்பா போன ஒலகத்துக்கே அவளும் போய்ச் சேர்ந்துட்டா.

ஆத்தா போனது எனக்குப் பெரிய கை முறிசலாயிடுச்சி. புள்ளெயையும் தூக்கிக்கிட்டு வீட்டு வேலெ செய்யப் போகும்படி ஆயிடுச்சே! அவங்கவங்க வாய்க்கு வந்தபடி பேசறதைக் கேக்கும்படி ஆயிடுச்சே!





## கொஞ்சும் புறு!

நேசம் மிகுந்த உன்னை
வெண்புறுவே— எங்கள்
நேருஜி தூதுவிட்டார்
வெண்புறுவே;
பாசம் மிகுந்த நீயும்
வெண்புறுவே— என்னைப்
பார்த்தோடி வந்தாயோ
வெண்புறுவே?
நட்புறவின் தூதாக
வெண்புறுவே— இந்த
நாடெல்லாம் சுற்றிடுவாய்
வெண்புறுவே;
மொட்டுதரில் பூப்போலே
வெண்புறுவே— பிஞ்சு
முகம்கண்டால் கொஞ்சிடுவாய்
வெண்புறுவே'

பாடல்: லெமன்

மேலட்டை வண்ணப்படம் எடுத்தவர்: எம். எஸ். சௌந்தரராஜன்

ஆச்சு, இன்னும் ஆறு மாசம் பல்லைக் கடிச்சிக்கிட்டு இருந்தா இந்தப் புள்ளையோட அப்பா வெளியில வந்திடும். அதுக்குப் புத்தி சொல்லி ஏதாச்சும் யோக்கியமான வேலைக்குப் போகச் சொல்லலாம். அப்புறம் நான் புள்ளையைப் பாத்துக்கிட்டு வீட்டிலேயே குந்தியிருக்க முடியுமே!

அந்த நம்பிக்கையில் மண் விழுந்திடுச்சி. அந்த ஆள் வரவே இல்லே. வெக்கத்தை விட்டுட்டு ஜெயிலுக்கே போயி விசாரிச்சேன். தண்டனைக் கால தள்ளுபடியைக் கணக்குப் பண்ணி ரெண்டு மாசத்துக்கு முன்னுலேயே அந்த ஆளை விடுதலைசெய்துவெளியே அனுப்பிச்சிட்டாங்கன்னு தெரிஞ்சுது.

ஒலகமே இருண்டு போயிட்ட மாதிரி ஆயிடுச்சு எனக்கு. ரெண்டு நாள் பல்லில தண்ணிக்கூட ஊத்தாம அப்பிடியே சுருண்டு கெடந்தேன். புள்ளைக்குப் பசி எடுத்துக் கத்தினுக் கூட நான் அசைஞ்சு கொடுக்கல. அதுவா தவுந்து வந்து என் மார்போட சேந்து மொகத்தைப் பொதைச்சுக்கும். பசி அடங்கினதும் தூங்கிப் போயிடும்.

எத்தினி நாளைக்கு அப்பிடி விழுந்துகெடக்க முடியும்! மறுபடியும் எழுந்திரிச்ச நமக்கு விதிச்ச விதி அவ்வளவு தான்னு வேலைக்குப் போக ஆரம்பிச்சேன். ஆனா மனசுக்குள்ள கொடைச்சல். அந்த ஆளு ஏன் வரல?

தற்செயலா வெவரம் புரிஞ்சிச்சி. வியாசர்பாடிக் குப்பத்து வம்பி ஒருத்தி வழியில தெம்பட்டா. அவதான் வெசயத்தைச் சொன்னு. அந்த ஆளு வேற யாரோ ஒருத்தியைச் சேர்த்துக்கிட்டு அம்பத்தூர்ல குடியேறிட்டானும். பழைய தொழில் தவிர, அந்த என் சக்களத்தி மூலமாயும் எப்படியெப்படியோ சம்பாரிச்சுக்கிட்டிருந்தானும். நல்ல வேளை, நான் தப்பினேன்!

ராவுத்தர் குடிசைக்கு இப்ப நான்தான் குத்தகை! என் புள்ளையும் நானுமா இப்பிடியே எத்தினி வருடம் இருக்கப் போறோமோ? என் புள்ளை தலையெடுக்கிற வரையிலேதான் என் கஷ்டமெல்லாம்! ஆனா புள்ளை எப்பிடித் தலையெடுக்கப் போகுதோ! அவங்கப்பனைப் போலவே தலையெடுத்தா நான் என்ன செய்ய முடியும்!

ஆனா ஒண்ணு. எதிர்காலம் எப்பிடி இருக்குமோன்னு புரியலதான். எப்பவும் போல இப்பவும் அன்னாடம் காச்சி பொழப்புதான். ஆனா இப்ப நான் தலைநிமிர்ந்து வேலைக்குப் போய்க்கிட்டிருக்கேன். கன்னி கழியலேன்னு என்னை யாரும் நோப்பாளம் காட்ட முடியாது. ஆம்பிளைத் தொணை இல்லேன்னு யாரும் என்னை இடிச்சிக் காட்ட முடியாது. எனக்கு என் புள்ளை இருக்கான் ஆம்பிளைத் தொணை!

'தர்மசங்கடம்' தம்பு!



● ''இது நிஜமா?'' படத்தைப் பற்றிய தகவலைச் சென்ற இதழில் தங்கள் ''சினிமா மசாலா'' பகுதியில் பிரசுரித்ததற்கு நன்றி. ஆனால் ஒரு சிறு திருத்தம். இதன் மூலக் கதை புகழ்பெற்ற அமெரிக்க ஹாஸ்ய நடிகர் ''டானி கே'' நடித்த ''வொண்டர் மேன்'' என்ற படம். 'வொண்டர் பஹுன்' அல்ல.

சென்னை-14 எஸ். லலிதா,
எஸ். பார்வதவர்த்தினி

● கல்கி வாங்கியவுடன் வழக்கம்போல் சாலையில் நடந்து கொண்டே பக்கங்களைப் புரட்டிக் கொண்டு வந்தேன். 36, 44, 48, 50, 54,56 பக்கங்களைப் புரட்டிப் படித்த போது என்னை அறியாமல் உரக்கச் சிரித்து விட்டேன். தெருவில் எல்லோரும் என்னை 'ஒரு மாதிரி'யாகப் பார்த்துக் கொண்டே போனார்கள். பின்லே என்ன, அருமையான ஜோக்குகளை அந்தப் பக்கங்களில் பிரசுரித்து விட்டு, ''மனசுக்குள்ளேயே சிரிக்கலாமே'' என்று தடையுத்தரவு போட்டால் எப்படி?

திருநெல்வேலி-1 எஸ். கணேசன்

● சமீபத்தில் டில்லி வானொலி நிலையம் பாரதியாரின் ''எந்தையும் தாயும் மகிழ்ந்து குலாவி இருந்ததும் இந்நாடே'' என்ற பாடலைப் பலமுறை ஒலிபரப்பியது. இப்பாடல் பல வருஷங்களுக்கு முன்பே ஸ்ரீமதி டி.கே. பட்டம்மாள் அவர்களால் இசைத்தட்டாக அளிக்கப்பட்டுள்ளது. தற்போதைய மெட்டில் இப்பாடல் சிதைக்கப்பட்டுக் கேட்கவே சகிக்கவில்லை. மேனாட்டு டியூனில் இப் பாடல் ''எந்தை உம்தாயும் மகிழ்ந்து...'' எனப் பிரித்துப் பிரித்துப் பாடப்படுவதால் விபரீத அர்த்தம் தொனிக்கிறது. இதை உடனடியாகத் தடுக்க வேண்டும்.

புதுதில்லி ந. நாராயணன்

● அகஸ்தியன் எழுதிய ''இரண்டு ஜவுளிக் கடைகள்'' என்ற கதைக்கு என்ன சன்மானம் கொடுத்தீர்களோ? எத்தனை கொடுத்தாலும் தகும். நூற்றுக்கு நூறு நாங்கள் அனுபவித்த அதே அனுபவத்தைத் திறம்பட எழுதியிருக்கிறார்.

திருச்சி ப. லெட்சுமி

● அறிமுக எழுத்தாளர் மங்கையர்க்கரசியின் ''பெண்மை சிலிர்த்தபொழுது'' ஒரு கருத்துக் கருவூலம்.

''ஸ்வயங்க''வில் வரும் அழகு நடை, அறிவு நடை நம் மனத்தில் ஆழமாய்ப் பதிகின்றது.

தரமான சிறுகதைகள் வெளியிடுவதில் கல்கி முன்னிற்கிறது என்பதற்கு ''இளமை எத்தனங்கள்'' மற்றுமோர் எடுத்துக்காட்டு.

குறிக்காரன்வலசு ந. இராமசாமி

● குழந்தைகள் ஆண்டில் வள்ளியப்பா பல்கலைக் கழகத்தில் கல்கி நினைவுச் சொற்பொழிவு ஆற்றியது பொருத்தம்தான். அதனைப் பற்றிய செய்திக் கட்டுரையும் பார்த்தேன். அதில் ஒரு பாராட்டு, தவறுதலாக எனக்குக் கிடைத்து விட்டது! 'அனுமாருக்கும் வாலதிகம்' பாடல் எனது நண்பர் 'லெமன்' எழுதியது. நான் அல்ல.

புதுதில்லி தம்பி சீனிவாசன்



● அணுசக்தி நிலையங்களின்று வெளியாகும் கதிரியக்கம் உள்ள அணுக் கழிவுப் பொருள்களை அடைத்து வைப்பதால் மக்களுக்கு ஏற்படும் ஆபத்தை எடுத்துச் சொன்ன ஒரே பத்திரிகையான 'கல்கி'க்கு நன்றி. மாறாந்தை கிராமம் தென்காசி தாலுக்காவில் இருந்தாலும் நெல்லைக்குத்தான் மிக அருகிலிருக்கிறது. எனவே ஆபத்து நெல்லைக்கும் அதன் சுற்று வட்டாரங்களுக்கும் தான்.

திருநெல்வேலி கிருஷ்ணன்

● இலங்கையில் கல்கி விற்பனைக்குத் தடை வரக்கூடாது என்ற நோக்கில் தலையங்கம் எழுதியிருக்கிறீர்கள். ஈழத்தமிழர் பிரச்னைகளுக்குத் தீர்வு சொல்லாமல் பூசி மெழுகியிருக்கிறீர்கள்.

சூளைமேடு பரிமளா மணாளன்

● இலங்கையில் வாழும் தமிழர்கள் படும் துன்பத்தைக் கண்டு மாற்றுக் கருத்துக்களைத் துணிந்து வெளியிட முடிவு செய்ததும் தமிழர்கள் எந்த நாட்டில் இருந்தாலும் அவர்களுக்கு ஏற்படும் அநீதியை உடன் சுட்டிக் காட்டுவதைக் கண்டும் என் உள்ளம் மகிழ்ச்சி கொண்டது.

நெய்வேலி-2 எ. சுதாகர் ஜேக்கப்

● வட்டமேஜைக்கு நான் எழுதிய கடிதத்தைப் புறக்கணித்து விட்டீர்கள். ஆகவே நானும் கல்கியைப் புறக்கணித்து விட்டேன்.

திருவாடானை எஸ். நாகசுந்தரம்

● 'ரஜனிகாந்த்' Blowup Poster வெளியிடப்போகும் அறிவிப்பு கண்டு மிகவும் மன வருத்தம் அடைகிறேன். 'கல்கி'யின் தரத்தை இப்படிக் கொச்சைப்படுத்துவதை நான் விரும்பவில்லை.

சென்னை-91 எம். எஸ். ஸ்ரீநிவாசன்
(ஒரு நீண்டநாள் வாசகர்)

# ஐயோ பாவம் பாரதியார்!

**முன்கதை**

பஞ்சரத்தினத்தின் ஒரே செல்ல மகன் ராஜ்குமார். வசதியானகுடும்பம், வளமான வாழ்க்கை. அவன் விரும்பிய அகல்யாவை மணந்து கொள்ள முதலில் தாயார் முரண்டினாலும் பிறகு அனுமதி கொடுத்து விடுகிறாள்..அகல்யா ஓர் அற்புதப் பெண். கணவனுக்கேற்ற மனைவி; மாமிக்கு ஏற்ற மருமகள். ஊராருக்கும் அவளிடம் மதிப்பு. ராஜ்குமார் உத்தியோக நிமித்தம் அயல் நாடு போகிறான். தாயையும், தாரத்தையும் பிரிந்து. அது ஒரு ஓய்வில்லாத வேலை, அரபு நாடுகளில். அங்கு காமேஷ் என்ற ஒரு வாலிபனைச் சந்திக்கிறான். ஒரே அச்சில் வார்த்த இருவடிவினர்களாக ராஜ்குமாரும் காமேஷும் இருக்கிறார்கள். குணத்தில் மட்டும் மாறுபட்டிருக்கிறார்கள். கீழ் மட்டத்திலிருந்து உயர்ந்தவன் காமேஷ். சில வேளைகளில் அவன் போக்குப்புதிராக இருக்கிறது ராஜ்குமாருக்கு. ஊரில் பஞ்சரத்தினத்துக்கு உடல் நலக்குறைவு ஏற்படுகிறது. தாயையும், மனைவியையும் விரைவிலேயே-வேலை ஒப்பந்தம் முடிந்த மறுநாளே விமானமேறி ஊர் போய்ப் பார்க்க வேண்டும் என்ற துடிப்புடன் இருக்கிறான் ராஜ்குமார்.

## 12

**தா**ய்நாட்டுக்கு இருவரும் சேர்ந்தாற் போல் ஒரே தினத்தில் ஒரே விமானத்தில் கிளம்ப ஏற்பாடுகள் துரிதமாய் நடந்து கொண்டிருந்தன.

அகல்யாவிடமிருந்து கடைசியாக வந்த கடிதத்தைக் கண்ட ராஜ்குமார் மிகவும் கலங்கிப் போயிருந்தான். பஞ்சரத்தினத்துக்கு உடம்பு மிகவும் கவலைக்கிடமாகி விட்டிருப்பதாக அவள் எழுதியிருந்தாள். இனி ஒரு கணமும் தாமதிக்கக் கூடாது என்று அவன் பயணத்துக்கு ஆவன செய்வதில் தீவிரமாக முனைந்திருந்தான்.

காமேஷுக்கு ஆரம்பத்திலேயே வேலையை விட்டுத் திரும்ப மிகவும் கவலையாகத்தான் இருந்தது. அவன் வேலை பார்த்த நிறுவனத்திலே அவனுக்குப் பழக்கமாகி விட்ட அமெரிக்க வாலிபன் ஒருவன் இருந்தான். அவன் தன் ஒப்பந்தம் முடிந்ததும் திரும்ப அமெரிக்காவுக்குப் பயணப் பட்டுக்கொண்டிருந்தான். சில மாதங்கள் சொந்த நாட்டில் உறவினர்களுடன் தங்கியிருந்துவிட்டு மறுபடியும் அரபு நாட்டுக்கு ஒரு வேலையைத் தேடிக்கொண்டு வந்துவிடப் போவதாகவும் அவனுக்கும் தான் வேலை செய்யப் போகிற ஸ்தாபனத்திலேயே ஒரு நல்ல வேலை வாங்கித் தரத் தன்னால் ஆகுமென்றும் அபயமளித்திருந்தான். அந்தத் தெம்பு காமேஷுக்கு. பம்பாய்க்குப் போய்க் கொஞ்ச நாட்கள் ஓய்வாக இருந்துவிட்டு மறுபடியும் நீண்டகால ஒப்பந்தத்தில் அரபு நாட்டுக்கு வேலை தேடிக் கொண்டு வந்து விடுவது என்பது அவனது திட்டம். அத்துடன் அவன் மனத்தில் இன்னொரு திட்டமும் உருவாகிக் கொண்டிருந்தது.

ராஜ்குமார் ஊருக்குக் கிளம்பச் சொல்லி வற்புறுத்தியபோது அவனுள் ஒரு பரபரப்பு ஏற்படத்தான் செய்தது.

அவனுக்கும் தாய் நாட்டில் கவனிக்க வேண்டிய ஒரு முக்கியமான வேலை இருக்கிறதே! அதை முடிக்க வேண்டாமா?

# பூக்குழி

**லக்ஷ்மி**





அன்று இரவு அவன் ராஜ்குமாரின் ஃப்ளாட்டில் வெகு நேரம் தங்கிவிட்டுத்தான் தனது இருப்பிடத்துக்குத் திரும்பி யிருந்தான். இரண்டு தினங்களில் ஊரை விட்டுத் திரும்புகிறோம். கடைசியாக இருவரும் சேர்ந்து ஒரு சினிமாப் பார்த்துவிட்டுச் சேர்ந்து சாப்பிட்டுப் பொழுதை நன்றாகச் சிறிது நேரம் குஷியாகக் கழித்தால்?...



ராஜ்குமார் வெகுவாக வேண்டிக்கொண்டதன் பேரில்தான் ஒப்புக்கொண்டான் காமேஷ்.

செலவு எல்லாம் ராஜ்குமாருடையது... செய்யட்டும் என்று தனது மணி பர்சைச் சட்டைப் பையிலிருந்து அவன் வெளியே எடுக்கவில்லை. பண விஷயத்தில் அவன் ராஜ்குமார் போல் தாராளமாக ஒருபோதும் இருந்ததில்லை.

'கிரைம் பஸ்ட்டர்ஸ்' என்னும் படத்தைப் பார்த்துவிட்டு இருவரும் ராஜ்குமாரின் பிளாட்டுக்குத் திரும்பினர். அவன் சிரித்தபடியே தான் வாங்கி வந்த ரொட்டி, வெண்ணெய், சீஸ், பழம் இவற்றை எப்பொழுதும் போல் சாப்பாட்டு மேஜை மீது பரப்பி வைத்தான். அத்துடன் பியர் டின்களையும் ஐஸ் துண்டங்கள் நிரம்பிய சிறு வாளியையும் டம்ளரையும் கொண்டு வைத்தான். ''சாப்பிடப்பா. ரொம்பப் பிகு செய்து கொள்ள வேண்டாம்'' வேடிக்கையாகப் பேசியபடி உபசரித்தான்.

ரொட்டி மீது வெண்ணெயை லேசாகப் பூசிக்கொண்டு ராஜ்குமார் உற்சாகமாகப் பேசினான்.

''இதற்குப் பிறகு திருச்சியில் எங்க வீட்டிலே பிரமாதமான விருந்துச் சாப்பாடு காத்திருக்கிறது. மறக்காதே. அகல்யா சமைப்பதில் ரொம்பக் கெட்டிக்காரி. கதம்ப சாதம் செய்து அவள் பரிமாறினால் பிறகு நீ இலையை விட்டு இலேசில் எழுந்திருக்க மாட்டாய். அப்படி ஒரு ருசி. கதம்ப சாதம் எனக்கு ரொம்பப் பிடிக்கும்னு அவளுக்குத் தெரியும். பம்பாயிலிருந்து சென்னை வரை நமது விமானப் பயணத்துக்கு டிக்கெட் ஊர்ஜிதமாகிவிட்டிருக்கு. அதற்குப் பிறகு நாம் சென்னையில் ஒரு ஹோட்டலில் ஒரு பகல் தாங்கிக்கொள்வோம். ஹைதராபாத்துக்குச் சரவணனுக்கு நாம் வந்திருப்பதைப் பற்றித் தெரிவித்து ஒரு டிரங்கால் போடணும் — அதுக்குப் பிறகு ராத்திரி வண்டியைப் பிடிக்கணும். டிக்கட் கிடைக்காவிட்டால் ஒரு டூரிஸ்ட் டாக்ஸியைப் பேசிக்கொண்டு ஊர் போய்ச் சேர்ந்துடணும். தாமதிக்கவே கூடாது.'' படபடவென்று பேசினான்.

''சென்னைக்கு நான் இரண்டு முறைகள் தான் சென்றிருக்கிறேன். இரண்டு தடவையும் ஒரே அவசரம். நான் சென்னையைக் கூடச் சரிவரப் பார்த்ததில்லை. ஒரு நாளு நான் அங்கே தங்கிவிட்டுப் பிறகு ஊருக்கு நான் வருகிறேனே?''.

''முடியாது. நீயும் என்னோடு ஜோடியாக வரவேண்டும். என்னால் உன்கூட சென்னையில் சில நாட்கள் தங்கவும் முடியாது. அம்மாவுக்கு உடம்புக்குச் சுகமில்லை. நான் உடனடியாகப் போக வேண்டும். மேலும் அகல்யா என் வரவுக்காக ஆவலுடன் காத்திருப்பாள்'' என்றான்.

அகல்யா என்றவுடனேயே அவன் முகத்தில் தோன்றிய மலர்ச்சியைக் கண்டு ஏனோ காமேஷின் மனம் கடுத்தது.

''எனக்கும் உங்கம்மாவைப் பார்க்க ணும்னு ஆசை; சரி. உடனேயே நாம் சென்னையிலிருந்து திருச்சிக்குப் போய்விடு வோம்'' என்றபோது காமேஷினாலேயே சமாளிக்க முடியாத ஓர் ஆத்திரம் குபீ ரென்று அவன் மனத்தில் பொங்கியது. மடமடவென்று கையில் பிடித்திருந்த பியர் முழுவதையும் ஒரே மூச்சாகக் குடித்து விட்டான்.

அதற்குப் பின்னர் ராஜ்குமார், அகல் யாவுக்கும், அம்மாவுக்கும் ஊரார்களுக்கும் தான் வாங்கிக் குவித்திருந்த சாமான்களை எடுத்து மேஜை மீது பரவலாகப் போட் டான். மறுபடியும் காமேஷின் உள்ளத்தில் அடக்க மாட்டாத ஆத்திரம் கொந்தளித் தது.

''அகல்யாவுக்குப் பச்சை, மஞ்சள், ஊதா மூன்று வர்ணங்கள் மீது ரொம்பப் பிரியம். அவைகள் அவளுக்கு ரொம்பப் பொருத்த மாக இருக்கும். கல்யாணத்தின்போது நிச் சியதாம்பூலத்துக்கு அவளுக்குப் பச்சை வண்ண பனாரிஸ் சேலைதான் எடுத்தோம். நாங்கள் மைசூருக்குப் புறப்பட்டபோது அவள் ஊதா வண்ணக் காஞ்சிபுரம் உடுத்திக் கொண்டு வந்தது என் நினைவில் இன்று போல இருக்கு... சும்மா சொல்லக் கூடாது. அவள் இயற்கையாகவே அழகி... ரொம்ப சாமர்த்தியக்காரி. இரண்டு வருஷமா எங்க வீட்டையும், நிலம், தோட்டம் எல்லாத் தையும் பொறுப்பாகக் கவனிப்பதோடு, என் தாயையும் எப்படிப் பார்த்துக்கிறா தெரி யுமா? அகல்யாவுக்கு என்னென்னமோ வாங் கிட்டுப் போகணும்னு ஆசைப்படறேன். புடவை வாங்குவதில் நான் சமீப காலத்தில் ரொம்பத் தேர்ந்து விட்டிருக்கிறேன்னு அவள் கேலி செய்து எழுதியிருந்தாள். அம்மா சொல்வாங்க.... எங்க அப்பா கூடப் புடவை தேர்ந்தெடுப்பதில் பெண்களை மிஞ்சிவிடுவாராம். அந்தக் குணம் எனக்கும் வந்திருக்கிறதோ என்னவோ....'' ராஜ் குமார் கபடமில்லாது சிரித்தபோது... காமேஷின் அடிவயிற்றில் அக்னி ஜ்வாலை விட்டு எரிந்தது. சிகரெட் ஒன்றை உருவி வாயில் வைத்துக் கொண்டான். அதன் நுனி இரண்டாகிவிடும் அளவு அழுத்தமாகவே கடித்து விட்டான்.

''அகல்யாவுக்கு இந்த வோர்த் சென்ட், மிட்நைட், சார்லி மூன்றும் முன்னதாகவே வாங்கி வச்சுட்டேன். காமேஷ்! ஓர் உதவி செய்வியா? உனக்கு யாருக்கும் பரிசுகள் கொண்டு போகத் தேவையில்லை அல்லவா? அதனால் நான் அம்மாவுக்கும் அகல்யா வுக்கும் வாங்கியிருக்கிற சில பொருள்களை உன் பெட்டியில் வைக்கிறேன். சுங்க அதிகாரி தொந்தரவு அதிகம் இல்லாமல் பம்பாயில் இறங்கலாம். என்ன சொல்றே? ஒப்புக்கு வியா?''

''பேஷா வை.... எதெல்லாம் என்கிட்டே கொடுக்க விரும்புறியோ அவைகளைப் பார்சலாகக் கட்டி இப்பவே என் கையில் கொடு.''

''ரொம்ப இல்லே. இரண்டு புடவைகள், ஒரு டவுடர் டின், ஒரு சென்ட். அம்மாவுக்கு ஒரு பாக்கெட் பேரீச்சம்பழம்... அவ்வளவு தான்'' என்று கூறிக்கொண்டு அவைகளைத் தனியே எடுத்து ஒரு பிளாஸ்டிக் பைக்குள் போட்டு நண்பனிடம் கொடுத்தான்.

''இவைகள் எல்லாம் அம்மாவுக்கும்— அகல்யாவுக்கும் என் பரிசுகள்!'' மகிழ்ச்சி யாக ராஜ்குமார் சொன்னபோது மீண்டும் காமேஷுக்கு எரிச்சலாக இருந்தது.

அந்தஸ்து — ஆஸ்தி — அன்பான தாய்— அழகான மனைவி — இத்தனையும் ஒருங்கே அமைந்திருக்கிற பெருமை... அடிக்கடி தம் பட்டம் கொட்டறான். ராஸ்கல்... இருக் கட்டும்... மனத்துக்குள் கருவினான் காமேஷ்.

வீட்டைத் திறந்து உள்ளே வந்ததும் அந்தப் பிளாஸ்டிக் பையை அசட்டையாக அருகிலிருந்த மேஜையின் மீது வீசிப் போட் டான்.

ராஜ்குமார் பயணத்துக்குத் தயாராகப் பெட்டிகளில் பொருள்களை அடுக்கி வைத் துக்கொண்டிருந்தான். காரையும் நல்ல விலைக்கு விற்று விட்டிருந்தான். எந்த நிமிஷ மும் தோளில் பையைப் போட்டுக்கொண்டு கிளம்பிவிடும் அளவில் ஃப்ளாட்டைச் சுத் தப்படுத்தித் தயாராகிவிட்டிருந்தான். ஆனால் காமேஷ்? எப்போதும் போல அவனது ஃப்ளாட் அலங்கோலமாகத்தான் இருந்தது. முதல் நாள் அவன் பயணத்துக்காக எடுத்துத் தூசி தட்டிக் காகிதம் போட்டுத் தயாராக வைத்திருந்த பயணப் பெட்டிகள் வாயைத் திறந்து கொண்டு முன்னறையில் அப்படியே கிடந்தன.

ஊருக்குக் கிளம்ப இன்னும் இரண்டு நாட்கள்தான் இருந்தன. வேலையினின்று விடுவித்துக் கொண்டதும் பெட்டிக்குள் சாமான்களை அடுக்கி வைக்கக் கூட நேரம் போதாது போலிருந்தது. காரை எடுத்துக் கொண்டு காசு தருவதாகச் சொன்ன ஆளைக் காணவில்லை. கடைசி நேரத்தில் அடி விலைக்கு யாரிடமாவது கொடுத்துத் தொலைக்க நேரும். ராஜ்குமாரைப்போல் அவன் ஏன் சுறுசுறுப்பாகவும் திறமையாக வும் இருக்க முடியவில்லை? அடுக்கடுக்காகத் தன்னிடம் காணப்பட்ட இயலாமையை எண்ணியபோது . அவனுக்கு ஆத்திரம் மறுபடியும் மண்டிக் கொண்டு வந்தது.

பெட்டிக்குள் ராஜ்குமார் கொடுத்த பிளாஸ்டிக் பையை மூர்க்கமாக உதறிக் கொட்டினான். மிருதுவான அந்தப் பிரஞ்சு ஷிபான் சேலைகளைப் பார்த்தபோது அவன் உள்ளத்திலே ஒரு கலவரமான நினைவு.

''என் மாமியாரைப் போல உத்தமி எங்கும் பார்க்க முடியாது.''
''நீ கொடுத்து வச்சவ! இப்ப எங்கே அவங்க?''
''எனக்குக் கல்யாணமான மறுநாளே பர லோகம் போயிட்டாங்க!''



அதிர்ஷ்டக்காரன் ராஸ்கல்!!! நண்பனைத் திட்டியபடியே பீரோவிலிருந்த தனது சட்டைத் துணி மணிகளைக் கிரைபோல் அள்ளிப் பெட்டிக்குள் அடைத்தான். பீரோ கம்பிகளில் தொங்கியவைகளை இழுக்கும் போது... அவன் கையில் இழுபட்டு வந்த அந்தப் பட்டு டையைப் பார்த்துத் தன்னை மறந்து ஒரு கணம் நின்றான்.

ஒரு கிறிஸ்துமஸ் தினத்தின்போது தேவசகாயம் அவனுக்கு அதைப் பரிசாக அளித்திருந்தார். அம்மா இறந்துபோயும் அவர் அவனைத் தொடர்ந்து அன்புடன் தன் ' வீட்டுப் பிள்ளைகளில் ஒருவனாகக் கவனித்துக் கொண்டார். அவன் அப்போது ஹாஸ்டலில் தங்கிப் படித்துக் கொண்டிருந்தான். கிறிஸ்துமஸ் பண்டிகைக்கு அவனை வீட்டுக்கு விருந்து சாப்பிட அழைத்திருந்தார் தேவசகாயம்.

விருந்துக்குப் பின்னர் வீட்டிலிருந்த கிறிஸ்துமஸ் மரத்தில் அவனுக்கும் ஒரு பரிசு பார்சல் கட்டித் தொங்கவிடப்பட்டிருந்தது. ''நன்றி ஐயா!'' நெஞ்சம் நெகிழ்ந்து போய் அந்தப் பொட்டலத்தை மெல்லப் பிரித்தான்.

உள்ளே பட்டில் ஆன பூப்போட்ட அழகான நீல வண்ணக் கழுத்து டை.

அவன் தாயார் அந்த வீட்டில் வேலை செய்ய ஆரம்பித்ததிலிருந்து தேவசகாயம் அவனைத் தன் குழந்தைகளில் ஒருவனாகப் பாவித்து'த்தான் நடத்தினார்.

பத்து வயதானபோது அவனது பள்ளிப் படிப்பைத் தாயார் நிறுத்தி வேலைக்கு அனுப்ப விரும்பியபோது அவர் எத்தனை கண்டிப்பாக அவளிடம் மறுத்துப் பேசினார்!

அவர் உதவியில்தான் தாய் இறந்து போன பின்பும் அவன் தொடர்ந்து ஹாஸ்டலில் தங்கிப் படித்தான். தொழிற் கல்வியில் தேர்ந்து பட்டம் பெற்றதும் அவரது முயற்சியால் அடைந்த வெற்றிதான். என்ஜினியர் பட்டம் பெற்ற பின் அவர் உதவியால் ஒரு நிறுவனத்தில் வேலை கூட அவனுக்குக் கிடைத்திருந்தது. கொஞ்ச காலம்தான் அங்கே வேலை பார்த்தான். பிறகு தானே பல இடங்களில் வேலை தேடிக் கொண்டு சென்றான். அவனது படிப்புக்கும் தகுதிக்கும் கிடைத்த ஊதியம் மனத்துக்குத் திருப்தி அளிக்கவில்லை. வெளிநாடுகளுக்குப் போக வேண்டும்; வாரிக் கொட்ட வேண்டும். விரைவில் பணம் பதவி, கார், பங்களா என்று தகுதிகளுடன் அவனும் தலை நிமிர்ந்து வாழ வேண்டும் என்ற ஆசை வந்த அவன் பஹ்ரானில் வேலை தேடிக் கொண்டு விட்டிருந்தான்.

தந்தை போலப் பாசத்துடன் தன்னை ஆளாக்கிய அவரிடம் சொல்லாது வெளிநாட்டுக்குப் புறப்படுவது சரியல்ல என்ற எண்ணம் ஏற்பட்டது. கொலாபாவுக்கு அவரைப் பார்க்கக் கிளம்பினான். வேலை மும்முரத்தில் அவரை அவன் அடிக்கடி சந்திக்க முடியாதிருந்தது. அதனால் அவனுக்குத் தெரிந்திருக்கவில்லை. அவன் போன போது அவர் மிகவும் நோயாகப் படுத்திருந்தார்.



காதலி: இப்படி செலவழிச்சால் எப்படி... எதுக்கு இப்போ ஐஸ்கிரீம்?... சரி போகட்டும், நம்ம கல்யாணத்துக்கப்புறம் இப்படி எல்லாம் செலவழிக்கக் கூடாது. எனக்கு மட்டும் வாங்கிக் கொடுத்தால் போதும்!

---

வாட்ட சாட்டமாக இருந்த மனிதர் பிடியில் அடங்கிவிடுகிறவர் போல் மிகவும் ஒடுங்கிக் கட்டிலில் கிடந்தார். ஆனால் கண்களில் மட்டும் அதே கூரிய பார்வை.

அவர் நோயாக இருந்தது தனக்குத் தெரியாது என்று சொல்லி வருந்திவிட்டு அன்று இரவு விமானத்தில் அவன் வெளி நாடு பயணப்படுவதை மெல்லத் தெரிவித்தான்.

''சந்தோஷம். உனக்கு நானே கடிதம் எழுதி அழைக்க வேணுமின்னு இருந்தேன். நீ வந்தது நல்லதாய்ப் போயிற்று'' என்றார்.

''நீங்கள் இதுவரை எனக்குச் செய்துள்ள உதவிக்கு நான் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறேன்.'' என்று அவன் ஆரம்பித்த போது அவர் தமது மெலிந்த கரத்தைத் தூக்கி மறுப்புத் தெரிவிக்க ஆட்டினார்.

''என் தாய் இறந்த பிறகும் நீங்கள் பணம் அனுப்பி என்னை ஹாஸ்டலில் படிக்க வைத்தீர்களே — அதை மறக்க முடியுமா?''

''நான் செலவழிக்கவில்லை. அந்தப் பணம் எல்லாம் உன்னுடையது.'' அவன் திடுக்கிட்டு விழித்தான்.

''உன் பணத்தைக் கொண்டுதான் உன்னைப் படிக்க வைத்தேன். சொல்லப் போனால் நான் செய்த வேலைக்கு ஊதியமும் அதிலிருந்து எடுத்துக் கொண்டேன். நான் ஒன்றும் உனக்கு இனாமாக ஏதும் செய்துவிடவில்லை. உன்னை மோசம் செய்யவில்லை. அதுவரை நான் ஒரு நல்ல மனிதன். அவ்வளவுதான். அருகில் வா சொல்கிறேன்'' என்றார்.

பெட்டியை மூடி வாரை இழுத்துக் கட்ட முயன்றபோது பெட்டியின் மூடி உப்பி, வெடித்துக் கொண்டு விடும் போலிருந்தது. உள்ளே அத்தனை சாமான்கள்.

கோபத்துடன் பெட்டியைக் கீழே தள்ளி அந்தப் பழைய நினைவில் ஏற்பட்ட ஆத்திரத்தில் பெட்டியின் மூடி மீது ஏறித் தொம் தொம் என்று இரு முறை குதித்து அதைச் சரிப்படுத்தி மூடி வாரை இழுத்துக் கட்டிப் பூட்டினான். அதே வேகத்தில் பெட்டியைக் காலால் உதைத்து ஒரு மூலையில் தள்ளி விட்டுத் தொப்பென்று களைப்புடன் சோபாவில் உட்கார்ந்தான்.

அவனது நெஞ்சு படபடவென்று அடித்துக்கொண்டது. உடம்பு கிடுகிடுவென்று குலுங்கியது. (தொடரும்)



# திருமலை-திருப்பதி தேவஸ்தானம் திருப்பதி

## யாத்ரீகர்கள் பெருமாளைத் தரிசிக்கச் சில நொடிகளுக்குமேல் அனுமதிக்கப் படுவதில்லையே, அது ஏன்?

ஒவ்வொரு பக்தரும் இம்மாதிரியான பொதுவான தாக்குதலை எழுப்புவது சகஜம். இது நியாயமாகவும் தோன்றலாம். ஆனாலும், இந்தப் பிரச்னையைக் கோவில் நிர்வாகிகள் சமாளிக்க வேண்டியதை உற்று நோக்கினால், அதன் நடைமுறையைப் பற்றி யோசித்தால், உண்மையை உணரலாம்: கூட்டமில்லாத சாதாரண நாட்களில் தினமும் 12,000 பக்தர்கள் பெருமாளின் தரிசனத்திற்கு வருகிறார்கள். மற்ற காலங்களிலும் (அதாவது மார்ச்சிலிருந்து செப்டம்பர் வரை), பண்டிகை நாட்களிலும் 30000 பக்தர்கள் வருகிறார்கள்.

ஒரு நாளில் 21 மணி நேரம் கோவில் திறந்திருக்கிறது. பெரும்பாலான நாட்களில் தர்ம தரிசனம் பதினன்கு மணி நேரத்துக்கு அளிக்கப்படுகிறது. ஆகவே சாஸ்திரப்படி நித்திய பூஜை கைங்கரியத்துக்காகக் குறைந்த அளவு நேரமே எடுத்துக் கொள்ளப்படுகிறது. பதினன்கு மணி நேரம் என்பது 50,400 நொடிகள்தானே. பெருமாள் சன்னதியில் க்யூவில் 20,000 பக்தர்கள் வந்து கொண்டிருந்தால் பெருமாளுக்கருகில் இரண்டு நொடி நேரம்தானே ஒவ்வொரு பக்தருக்கும் தரிசனத்திற்கு அனுமதிக்க இயலும் அல்லவா? இப்படி செய்தால்தான் க்யூவில் காத்திருக்கும் மற்ற ஆயிரக்கணக்கான பக்தர்களையும் திருப்திப்படுத்த முடியும்.

ஒவ்வொரு பக்தரையும் 'தயவு செய்து நகருங்கள்' என்று கோயில் நிர்வாகிகள் கோரினல்தான் க்யூவில் நிற்கும் மற்ற எல்லா பக்தர்களுக்கும் பெருமாளின் தரிசனத்தைப் பூரணமாகப் பெற்றுத் தர இயலுகிறது.

எக்ஸிக்யூடிவ் ஆபீசர்
திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி

# நீங்காத நினைவுகள்!

மீ.ப.சோமு



✖ எஸ். ஜீ. கிட்டப்பா.

இதயத்துக்குள்ளே புகுந்து ககரூட்டுகிற இசையினால் நாடகமேடையில் நிகரற்ற புகழோடு விளங்கிய எஸ். ஜீ. கிட்டப்பா எங்கள் வீட்டுக்கு அருகில் இருந்த அவருடைய மாமனார் அகத்துக்கு அடிக்கடி வந்து போவதுண்டு. எனக்கு அப்போது ஏழெட்டு வயதிருக்கும். கிட்டப்பா வந்து விட்டால் அந்த வீடு முழுதும் ஒரே பாட்டும் விருந்துகளுமாக அமர்க்களப்படும்! அவருடைய பாட்டில் எனக்கிருந்த அளவுகடந்த மோகத்தினால் நானும் என் சிநேகிதச் சிறுவர்கள் சிலரும் அந்த வீட்டிலேயே சுற்றிக் கொண்டிருப்போம்!

ஒரு நாள் காலையில் மாமனார் வீட்டுத் திண்ணையிலிருந்து கிட்டப்பா சங்கராபரணம் பாடிக் கொண்டிருந்தார். சாதாரணமாக எந்த இசை மேதையினாலும் எட்டிப் பிடிக்க முடியாத மேல் ஸ்தாயி சஞ்சாரங்களில் அவருடைய குரல் அனாயாசமாக எவ்விப் பறந்து, அந்த உயரத்திலிருந்து அதிர்வேட்டுக்களை உதிர்த்துக் கொண்டிருந்தது. அந்த அற்புதமான இசையிலே கவரப்பட்டவராய் யாரோ ஒரு சாது வீட்டு முற்றத்திலே நுழைந்து திண்ணையில் வந்து உட்கார்ந்து கொண்டார்.

பாட்டு முடிந்ததும் ''தேவகானம்!'' என்று பரவசத்தோடு சொன்னார் அந்த நாடோடி. அப்போதுதான் கிட்டப்பா அந்த நாடோடி மனிதரைச் சரியாகக் கவனித்தார். அப்படியே எழுந்து வணங்கினார்.

'லங்கோடி' அணிந்த ஒல்லியான உடம்பு. ''லங்கோடி''க்கு மேலே ஒரு அங்வான் துணியை 'பெல்ட்' மாதிரிச் சுற்றி இறுக்கியிருந்தார். கையில் ஒரு இரும்பு இடுக்கி. கண்களில் இந்த உலகத்தையே ஊடுருவிப் பாய்கிற உடைவாளின் வீச்சுப் பார்வை!

''நீ இத்தனை அற்புதமாகப் பாடி என்னை அரை மணி நேரம் மோன ஒடுக்கத்துக்கே கொண்டு போயிருந்தாய். உனக்கு நான் ஏதாவது கைம்மாறு செய்தாகவேண்டும் இப்போது! சொல்!'' என்றார் அந்தச் சாது.

கிட்டப்பாவுக்குச் சித்தர்களிடத்தில் எப்போதுமே ஒரு மரியாதை உண்டு.

''ஆண்டவனே! நீங்கள் எனக்குச் செய்கிற பெரிய உதவி ஒன்று உண்டு. அதோ நார்க் கட்டிலில் படுத்திருக்கிறாரே அவர் எனக்குத் தபலா வாசிக்கிறவர். மிருதங்கத்திலும் பெரிய வித்துவான். அவருக்கு இப்போது ''பெரிய'' வியாதி வந்து, விரல்களையெல்லாம் தின்று கொண்டிருக்கிறது. தபலாவைத் தொடவே முடியாது! ஆண்டவன் கொஞ்சம் அனுக்கிரகம் பண்ண வேண்டும்!'' என்றார் கிட்டப்பா.

நாடோடி மனிதர் சிரித்துக் கொண்டே எதிரே இருந்த நாட்டு மருந்துக் கடையிலிருந்து கொஞ்சம் கந்தகம் வாங்கிவரும்படி சொன்னார். கிட்டப்பாவின் மனைவியைப் பார்த்து, ''முப்பது நாற்பது இட்டிலி இருக்குமா அம்மணி!'' என்று கேட்டார்.

''இருக்கிறது. பதினைந்து பேர் தாராளமாகச் சாப்பிடலாம்!''

''மிளகாய்ப் பொடியும் எண்ணெயும் தயாராக வைத்திரு அம்மே!''

கந்தகம் வந்தது. முற்றத்திலே இரும்பு இடுக்கியினால் ஒரு சிறிய குழியைத்தோண்டி அதில் கந்தகத்தையும் ஒரு ''துட்டு'' (காலணாவைவிடப் பெரிதான அந்தக் காலத்துச் செப்புக் காசு) நாணயத்தையும் வைத்து, லங்கோடியில் செருகி வைத்திருந்த ஒரு வெள்ளைப் பொடியை (அது திருநீறு அல்லது பஸ்பமா தெரியாது) 'குருநாதா' என்று சொல்லியவாறு அதில் தூவி அந்தக் குழிக்கு மேலே எருத் துண்டுகளை வைத்துத் தீ மூட்டி மருத்துவ முறையிலே நீற்றினார்.

''கிட்டப்பா, இங்கே துலா (ஏற்றம்) உள்ள கிணறு இருக்கிறதா?'' என்று கேட்டார்.

''ஆமாம். பக்கத்திலே அப்பாவு பிள்ளை தோட்டம். அதில் பெரிய கமலை போட்ட கிணறே இருக்கிறது!''

குழியிலிருந்து நீறிப் போயிருந்த ஒரு செந்தூரப் பொடியை எடுத்தார். அதில் பாதியை அப்படியே அந்தக் குஷ்டரோகி நண்பரின் வாய்க்குள்ளே போட்டார். மீதிப் பாதியை மடித்து வைத்துக் கொண்டார்.



அவள்: உன்பாடு தேவலாம்; உன் வீட்டுக்காரர் உன்னைக் கையால்தான் அடிக்கிறார் என்கிறாய். என் வீட்டுக்காரரோ காலால் உதைக்கிறாரே!

இவள்: என்ன பண்றது? நான் பேஸ்கட் பால் சேம்பியனுக்கும் நீ ஃபுட்பால் சேம்பியனுக்கும் வாழ்க்கைப்பட்டு விட்டோமே!

-ஈரோடு மாரிமுத்து



---

கால் மணி நேரத்தில் அந்த நண்பர் ''ஐயோ அம்மா அப்பா'' என்று கதற ஆரம்பித்தார். ''உடம்பெல்லாம் நெருப்புப் பிடிக்கிறதே!'' என்று கூப்பாடு போட்டார் அவர்!

அவரை அழைத்துக் கொண்டு அப்பாவு பின்னை தோட்டத்துக்குச் சென்றோம். கல் மீது அவரை உட்கார வைத்தார். ஒரு அரை மணி நேரம் அவர் தலையிலே கமலை கமலையாகத் தண்ணீர் இறைத்தான் தோட்டக்காரன்!

''இப்போ எப்படி?'' என்று கேட்டார் சாது!

''சூடு தணிந்து விட்டது. ஆனால் வயிற்றுக்குள் ஒரே கபகபா என்கிறது!'' என்றார் தபலா நண்பர்.

வீட்டுக்கு அவரை அழைத்து வந்து, எண்ணிக்கைக்கு ஒரு கணக்கில்லை, அத்தனை இட்டிலிகள் பரிமாறப்பட்டன!

''இந்தா இட்டப்பா! இந்தப் பொட்டலத்தில் இன்னும் பாதி மருந்து இருக்கிறது. இதற்கு அவசியம் இல்லை. தூர எறிந்து விடு! வேறு யாரும் சாப்பிடக் கூடாது!''

இப்படிச் சொல்லிக் கொண்டே, 'தடால்' என்று ஒரு தாவுத் தாவினார், முற்றத்துக்கு அப்பால் ஒரு பித்துச் சிரிப்புச் சிரித்துக் கொண்டே! திகைப்பிலிருந்து நாங்கள் மீள்வதற்குள் ஒரு விநாடியில் தெருவுக்குள்ளே ஒரு வெறியோடு ஓடிவிட்டார் அவர்! இது நாள் வரை அவரை மறுபடி நான் பார்க்கவில்லை!

பத்துநாட்களில் தபலா நண்பரின் விரல்கள் உலர்ந்து சரியாகி, ஒரு மாசத்தில் அவர் மீண்டும் தபலா வாசிக்கத் தொடங்கினார்!

இதுபோலவே இன்னொரு நிகழ்ச்சி 1948 இல் நடந்தது. அப்போது நான் திருச்சி ரேடியோவில் பணி புரிந்து வந்தேன். உறையூரை அடுத்த திருத்தாந்தோணியில் சபாபதி முதலியார் என்று ஒரு நாடி சோதிடர் இருந்தார். நாடி என்றால், நம்முடைய ஜாதகத்தைக் கொடுத்தால் அதற்குரிய ஏடுகளை எடுத்து அவற்றில் நமது ஊர், பெயர், வரலாறு முழுதும் எழுதி வைத்திருப்பதைப் படித்து விடுவார்கள். இதில் பல ''தெளிவு சுளிவுகள்'' உண்டு. எச்சரிக்கையாக இருக்க வேண்டிய காரியம். ஆனால் சபாபதி முதலியார் எனது நம்பிக்கைக்குப் பாத்திரராக இருந்ததால் அடிக்கடி பல நண்பர்களை அவரிடம் நான் அழைத்துப் போவதுண்டு.

ஒருநாள் ஒரு நண்பரின் ஏட்டைப் படித்துக் கொண்டிருந்த போது, ஒரு அன்னியர் உள்ளே வந்தார், ஒரு தாடிப் பரதேசி!

''ஜாதகம் இல்லாதவர்களுக்கு என்ன செய்வீர்கள்?'' என்று முதலியாரைக் கேட்டார் அந்த மனிதர்.

''கைரேகையின் புள்ளிகளைப் பார்த்து அதைக் கொண்டு அதற்குரிய ஏட்டைத் தேடிக் கண்டு பிடித்துப் படித்தால் அதில் ஜாதகமும் பலன்களும் வரும்!'' என்று பதில் சொல்லிவிட்டு, மேலே படிக்கத் தொடங்கினார் முதலியார்.

''ஒருவருடைய ஜாதகத்தைக் கணிப்பதற்கு இத்தனை ஏடுகளைப் புரட்ட வேண்டுமா?'' என்று கேட்டுக்கொண்டே எதிரே இருந்த என்னையே ஒரு நிமிஷம் கூர்ந்து பார்த்தார் அந்தப் பரதேசி. மறுநிமிஷம் தரையிலே கிடந்த ஒரு ''சாக்பீஸை'' எடுத்து என் எதிரில் கட்டங்கள் போட்டு விறுவிறு என்று கிறுக்கினார். என்ன ஆச்சரியம்! என்னுடைய பிறந்த தேதி, மாதம், ஆண்டு, என் ஜாதகம், தசாபுக்தி எல்லாம் துல்லியமாக எழுதிப் போட்டுவிட்டார் தரையிலே!

நாங்கள் எல்லோரும், சபாபதி முதலியார் உள்பட அப்படியே அசந்துபோய்விட்டோம்!

''குருநாதன் திருவருள்'' என்று சொல்லிக் கொண்டே எழுந்தார் அந்த வழிப்போக்கர்!

''ஐயா யாரு தெரியலையே!'' என்று இழுத்தார் சபாபதி முதலியார்.

''ஓகோ! நம்முடைய ஜாதகத்தையே பார்க்க நினைக்கிறீரோ! நமக்கு ஜோசியத்தில் நம்பிக்கை கிடையாது முதலியார்வாள்!'' என்று சொல்லி ஒரு துள்ளுத் துள்ளி மின்னல் வேகத்தில் மறைந்து விட்டார் அந்தச் சித்தர்!

முப்பது, ஐம்பது என்று ஆண்டுகள் ஓடிவிட்டன. இந்த இரண்டு நிகழ்ச்சிகளும் நடந்து! இந்த இடைக்காலத்தில் கடல் கடந்த நாடுகள் பலவற்றிலும் சுற்றி ஏதேதோ கண்டும் கற்றும் இருப்பதாக அறிவு ஆணவம் பேசுகிறது. என்றாலும் இந்த இரு மகான்களுடைய பேரறிவும் எந்தப் பல்கலைக் கழகத்திலே கற்ற கல்வி? அவர்களுடைய ''குருநாதர்கள்'' யார்?

# சினிமா மசாலா ▫▫▫ "சலன்"

கமலஹாசனின் அண்ணன் சாருஹாசன் உதிரிப் பூக்கள் படத்தில் ஒரு முக்கிய வேடத்தில் நடித்துள்ளார். அந்தப் படம் வெளியானவுடன் பல தயாரிப்பாளர்கள் இவரை நடிப்பதற்கு அழைத்தார்கள். ஆனால் இவர் மறுத்துவிட்டார். அதற்குக் காரணம், இவரது வக்கீல் தொழில் ஒன்று. இரண்டு, கமலஹாசனின் பிரச்னைகள் எல்லாவற்றையும் இவர்தான் கவனித்துக் கொள்கிறார். மூன்றாவது, "ஒரு நல்ல படத்தில் நடித்தோம் என்ற திருப்தியோடு இப்போதே ஒதுங்கிக் கொள்வது மேலில்லையா?" என்று கேட்கிறார். இவர் நடிக்கப் போவதில்லை என்றுதான் முடிவு செய்திருக்கிறாரே தவிர "ஹாசன் பிரதர்ஸ்" என்ற பெயரில் உருவாகியுள்ள பட நிறுவனத்தில் தற்சமயம் கதை, வசனம், ஆகிய பொறுப்புக்களை மற்றவர்களுடன் பகிர்ந்துகொண்டுள்ளார்.

• • •

Blow up Poster படத்தில் கையெழுத்து வாங்க ஸ்ரீதேவியிடம் சென்றேன்.

"சார், உங்களுக்கு எங்கிருந்து சார் இந்தப் போட்டோ கிடைத்தது?" என்றார் ஸ்ரீதேவி.

✕ படங்கள் : செல்வராஜ்



## இங்கே ஆண் உடையிலிருக்கும் நடிகைகள் யார் யார்? கண்டுபிடியுங்களேன்!

☆ ☆

விடை: 1. மஞ்சுளா (கன்னடம்), 2. ஜோதிலக்ஷ்மி, 3. கே. ஆர். விஜயா, 4. டி. ஆர். ராஜகுமாரி, 5. ஹேமமாலினி

''ஏன்?'' என்றேன் நான். ''எனக்கு இது ரொம்பப் பிடித்த படம். இந்தத் திரைப் படத்தில்தான் முதன் முறையாகப் புடவை கட்டி நடிக்கிறேன். கதாநாயகியாக நடிக்கும் முதல் படம். பெயர் துலா வர்ஷம். அதற்குப் பிறகு அனுராகாலு தெலுங்குப் படம். அதற்குப் பிறகுதான் பாலசந்தர் படம்'' என்றார் சந்தோஷத்துடன். பின் படத்தில் கையெழுத்தும் போட்டுக் கொடுத்தார்.

**Blow up poster**

புகைப்படம் எடுத்தவர்: **மோனலிசா**



✕ இளையராஜா

• • •

ஓரம்போ' பாடல் எப்படிப் புகழ் பெற்றதோ அதே போல் மற்றொரு பாடலும் புகழ் பெறப் போகிறது. இந்தப் பாடல் 'பொண்ணு ஊருக்குப் புதுசு' படத்தை இயக்கிய செல்வராஜின் அடுத்த படமான 'அகல் விளக்கு' படத்தில் வருகிறது. 'ஓரம்போ'வில் இருந்த அதே சேர்க்கை இதிலும் உள்ளது. எழுதியவர் கங்கை அமரன். இசையமைத்தவர் இளையராஜா. ஆனால் இந்தப் புதிய படத்தின் பாடலைப் பாடியவர்கள் இளையராஜாவும் அவரது சகோதரர் பாஸ்கரும்தான். பாட்டின் முதல் அடி என்ன தெரியுமா?

'பாத்தியா பாத்தியா
பயாஸ்கோப்பு பாத்தியா'

என்பதுதான். இது கண்டிப்பாகப் புகழ் பெறும் என்பதற்கான காரணம் தேர்தல் வருகிறது. இப்பாடல் தேர்தலைப் பற்றியது. இதில் ஒரு சாம்பிள் வரி:

''அரிசி விலையைப் பாத்தியா?''

தேர்தல் கூட்டங்களில் எல்லாம் இந்தப் பாட்டுத்தான் இருக்கும். விஷயமும், விவரமும் தெரிந்தவர்கள்தானே இந்த இளையராஜா அண்டு கோ.!



# பாரம் இறங்கியது!

**பி.எஸ்.மணி**

**எல்.** ஐ. சி. கட்டிடம் மாதிரி மூன்று எல். ஐ. சி. கட்டிட உயரம் கொண்டது இந்த ராட்சத பளு தூக்கி. (Crane)

சித்ரம் கம்பெனி ஜாயிண்ட் மானேஜிங் டைரக்டர் விசுவநாதன், "ஸார்! வெறுமனே பத்திரிகையிலே படிச்சா இதனுடை பெருமை தெரியாது. அதற்காகத்தான் உங்களை நேரிலே பார்க்கிறதுக்கு அழைத்து விட்டேன்!" என்றார்.

"நீங்க எழுபது மீட்டர் உயரத்துக்கு ஏறப்போறீங்க. நானும் உங்க கூட வந்து அதைப் பற்றி விவரிக்கப் போகிறேன்!" என்று ஆதர



வாகக் கையைப் பிடித்துக் கொண்டு படிகளில் ஏறினார் இளைஞர் ராமச்சந்திரன்!

"பாருங்கோ! இந்த ராட்சதப் பளு தூக்கியின் ஒரு காலுக்கும் மற்றொரு காலுக்கும் இடையேயுள்ள தூரம் 95 மீட்டர்! ஒரு கால் நீங்கள் படி ஏறுகிற இடத்திலே இருக்கு. இன்னொரு கால் அந்த 'ராணி பத்மினி' கப்பலுக்கு அப்பாலே இருக்கு!" என் கால்கள் இரண்டும் நிலை தடுமாறின! ஆனால் இன்ஜினியர் ராமச்சந்திரன் தாம் பிடித்த பிடியைத் தளர்த்தினால் தானே!

மூச்சு இரைக்க இரைக்கப் படிகளில் ஏறினேன். "இந்தப் பளுதூக்கிக்குத் தேவையான விசேஷ எஃகு இரும்புத் தகடுகள் 1250 டன்கள். இந்தப் பளுதூக்கியில் ஓடும் கேபிள்களின் தூரம் எவ்வளவு தெரியுமா? 45 கிலோ மீட்டர். இதில் வெல்ட் செய்யப்பட்ட எஃகுத் தகடுகளின் தூரம் 50 கிலோ மீட்டர்!" என்று புள்ளி விவரங்களைச் சொல்லி மிரட்டியபோதே என்னை மேலே கைப்பிடியைத் தளர்த்தாமல் இழுத்துக் கொண்டு போனார்! நல்ல காலம்! கொஞ்ச தூரத்துக்கு அப்பால் எங்களுக்கு 'லிப்ட்' கிடைத்துச் சிரமத்தைக் குறைத்தது!

லிஃப்ட் எங்களை உயரே கொண்டு சென்று கொண்டிருந்தபோது திரு. ராமச்சந்திரன் கொடுத்த தொழில் நுணுக்க விவரங்களை அடுக்கினால் பாரதமாகிவிடும். அதைவிட வசிஷ்டர் வாயால் பிரும்மரிஷி என்பதைப் போல லாயிட் சர்வே ஸ்தாபனத்தின் தொழில் நிபுணர் ஏ. பி. மெர்ச்சண்ட் நற்சான்றிதழ் வழங்கியுள்ளார் என்றால் இதன் பெருமை துல்லியமாகப் புரிந்து விடும்.

கொச்சி கப்பல் கட்டும் நிறுவனத்தில் ராணி பத்மினி கப்பல் நிறுவுவதற்கு இந்த ராட்சதப் பளுதூக்கி பெரிதும் பயன்படுவதை நேரில் கண்டோம். கொச்சி கப்பல் கட்டும் நிறுவன இன்ஜினியர், "ஸார்! உங்க கிரேன் ரொம்ப ஜோரா வேலை செய்யறது!" என்று திரு விசுவநாதனிடம் நேரில் வந்து பாராட்டிவிட்டுப் போனார்.

கொச்சி துறைமுகத்தில் என்ன அசுரக் காற்று வீசினாலும் இந்த ராட்சதப் பளு தூக்கியை அசைக்க முடியாது! அதற்காக இதில் புயல் பாதுகாப்புக் கருவியைப் பொருத்தி வைத்திருக்கிறார்கள். வருமுன் காக்கும் திட்டம் இது. காற்றின் வேகம் ஓர் அளவுக்கு மேல் போனால் இந்தப் பாரம் தூக்கியின் இயக்கம் தானாகவே நின்று விடும்.

"ஸார்! இந்தப் பளுதூக்கி அதிகப் பிரசங்கித்தனம் செய்யாது! 150 டன்னுக்கு அதிகமாக ஒரு டன் ஏற்றிப்பார்க்கலாமே என்று நாம் எண்ணினாலும் இது தன் மின் இணைப்புகளைத் தான் இயங்கு முறையில் துண்டித்துக் கொண்டு வேலை செய்யாமல் நின்றுவிடும்!" என்றார் திரு ராமச்சந்திரன்.

இந்தப் பளுதூக்கியின் இரு கால்களையும் அதன் மேல் குறுக்காக இணைத்திருக்கும் பகுதியையும் நிர்மாணித்த விதமே அலாதியானது. கால்களை முதலில் தரையோடு

---

1. கொச்சி கப்பல் கட்டுமிடத்திலுள்ள ராட்சதப் பளு தூக்கி.
2. கப்பல் துறை மந்திரி ஜனேஷ்வர் மிஸ்ராவிடம் சித்ரம் கம்பெனி மானேஜிங் டைரக்டர் சிட்னிஸ் கிரேன் மாடலை அளிக்கிறார். மந்திரிக்கு அருகே திரு. விசுவநாதன்.



அவன்: ''ஆனியன் தோசை கொண்டாப்பா!''
சர்வர்: ''போல்ட் ஆனியனா... ஸ்க்ரூ ஆனியனா ஸார்?''
— உ. ராஜாஜி

தரையாகப் படுக்க வைத்தது போல் உருவாக்கிக் குறுக்குப் பகுதியையும் 'கீல்' போட்டது போல் இணைத்து விட்டார்கள். பிறகு 'ஜாக்' போட்டு பஞ்சரான காரைத் தூக்குவோமில்லையா, அதே அடிப்படைத் தத்துவத்தில் இதையும் 'ஜாக் அப்' செய்தார்கள். இணைப்புப் பகுதி உயர உயரப் படுத்திருக்கும் கால்களும் நிமிர்ந்து நின்றன!

எழுபது மீட்டர் உயரத்திலிருந்து கீழே தெரியும் கப்பல், கட்டடங்கள், சிறியபொம்மைகளாகக் காட்சி தருகின்றன. இந்த உயரத்தில் நின்றாலே நமக்குத் தலையைச் சுற்றுகிறது. அதில் நின்று பணியாற்றிப் பாரம் தூக்கியை நிர்மாணித்து முடித்த பணியாளர்களை நினைத்தால் பிரமிப்புத்தான் ஏற்படுகிறது. 1250 டன் எடையுள்ள ஒரு பொருளை (Single Piece) 70 மீட்டர் உயரத்துக்குத் தூக்கிப் பொருத்தியது சித்ரம் கம்பெனி இஞ்சினியரிங் கலைஞர்கள் கண்ட சாதனை. பாரத தேசம் இதுவரை கண்டிராத அபூர்வ சாதனை. கொச்சியின் புகழுக்கு இந்த ராட்சதப் பளுதூக்கி கலங்கரை விளக்கமாகத் திகழும். இது உருவாவதற்கு சித்ரம் கம்பெனிக்கு மேற்கு ஜெர்மானிய நிறுவனத் தொழில் நுணுக்க உதவி கிட்டியது.

இதற்குத் தேவையான எலெக்ட்ரானிக் சாதனங்களை ஸ்வீடனில் உள்ள ''ஆசியா'' என்ற நிறுவனத்திலிருந்து சித்ரம் கம்பெனியார் தருவித்திருக்கிறார்கள். அக்டோபர் 17ந் தேதி கொச்சி கப்பல் கட்டும் நிறுவன பிரதம இன்ஜினியரிடம் இந்த ராட்சதப் பளுதூக்கி அதிகாரபூர்வமாக ஒப்படைக்கப்பட்டு விட்டது.

திரு விசுவநாதன் இதனை நிறுவுவதற்கு எடுத்துக்கொண்டசிரமம் கொஞ்சநஞ்சமல்ல. இவருக்குக் கடவுள் பக்தி அதிகம். ''எல்லாம் அந்தக் குருவாயூரப்பனின் மேல் பாரத்தைப் போட்டுவிட்டுத் தொடங்கினேன். இன்று என் மனப் பாரம் குறைந்து விட்டது!'' என்று சொன்னார். ராட்சதப் பளுதூக்கியைப் பற்றிய விவரங்களை மனத்தில் பாரமாகத் தூக்கி வந்து எழுத்தில் கொட்டிய பிறகுதான் என் மனப் பாரமும் குறைந்தது!

---

# ஹலோ! இளையராஜா பேசறேன்!



''ஹலோ! அன்பார்ந்த கல்கி வாசகர்களே! நான்தான் இளையராஜா பேசறேன்!

''யாருமே சற்றும் எதிர்பாராத முறையில் கடுமையான மழை பெய்து பூமிக்கடியில் டெலிஃபோன் கேபிள் பழுதாகி விட்டதால் சென்ற வாரக் கல்கியில் அறிவித்தது போல வெள்ளிக்கிழமை 2-ம் தேதி காலை உங்களுடன் ஃபோனில் பேச முடியாமல் போய் விட்டது. இதனால் உங்களுக்கு ஏற்பட்டிருக்கக் கூடிய சிரமத்துக்கும் ஏமாற்றத்துக்கும் வருந்துகிறேன்.

''இதற்குப் பதில் வெள்ளிக் கிழமை நவம்பர் 9-ந் தேதி இரவு 9 மணி முதல் 10 மணி வரை ஃபோனில் உங்கள் கேள்விகளுக்குப் பதில் கூறுகிறேன்.. ஃபோன் நெம்பர் நினைவிருக்கிறதா? 443319.

''தேதி நேரம் மாற்றம் தவிர. மற்ற விவரங்களெல்லாம் சென்ற வாரக் கல்கியில் அறிவித்தது போலவேதான். எதற்கும் அதை மறுபடி ஒருமுறை படித்துப் பார்த்துக் கொள்ளுங்களேன்!

''இந்த முறை நமது ஃபோன் உரையாடலுக்குத் தடங்கல் ஏதும் ஏற்படாது என்று நம்பி இறையருளையும் வேண்டுவோம்!

''விடைபெறவா? வணக்கம்.''

# தங்கத்தைப் பதுக்காதீர்கள் !



உலகிற்கு பயன்படாத அறிவைப்போல, உபயோகப் படுத்தப் படாத தங்கமும் தேவையற்றது. அதனால் நாட்டுக்கு மிகப் பெரிய நஷ்டம் கூட. தங்கத்தைப் பயன்படுத்துங்கள்—தேவையான நகைகள் செய்ய மட்டுமே. தங்கத்தைப் பதுக்காதீர்கள். புதியதையே நாடுங்கள்; சிறந்ததையே தேர்ந்தெடுங்கள். உம்மிடி முரளீதர் ஜுவல்லர்ஸ் உங்கள் பழைய நகைகளைப் புதியனவாக மாற்ற உதவுகின்றனர்.

மேலும் உம்மிடியார் டெபாஸிட் கார்ப்பரேஷன் உங்கள் சேமிப்புகளைப் பாதுகாப்பதுடன், ஐந்து வருடங்களுக்கு 18% வட்டியும் அளிக்கிறது.



- உம்மிடி முரளீதர் ஜுவல்லர்ஸ்
- உம்மிடியார் டெபாஸிட் கார்ப்பரேஷன்

53, கதீட்ரல் ரோடு, சென்னை-600 086. போன்: 83849/89039

Criterion VMJ 3655 TM

# கடல் ராணி

## சாண்டில்யன்

### முன்கதைச் சுருக்கம்

சிவாஜி அரபிக்கடலில் கட்டிய சிந்துதுர்க்கத்தைப் பார்க்க வந்த இந்திரஜித் அனந்த், அங்கு பெரிய கொள்ளைக்காரி எனப் பிரசித்தி பெற்ற கடல்ராணியை இரு வெள்ளையர்களிடமிருந்து காப்பாற்றுகிறான். அவளைப் பிடிக்க முற்பட்ட பிரபல பிரிட்டிஷ் கொள்ளைக்காரனான இங்கலண்டினிடமிருந்தும், ஒற்றைக்கால் மாலுமியான ஸில்வர் என்ற பயங்கரக் கொள்ளைக்காரனிடமிருந்தும் அவளைக் காப்பாற்றுகிறான். அந்த நடிப்பு அவளை அபகரித்துச் செல்ல வந்த காஸண்ட்ரா என்ற பிரும்மாண்டக் கப்பலின் காப்டனான டெல்லரையும் மடக்கி அவனுடன் ராணியையும் அழைத்துக் கொண்டு அந்தப் பெரிய கப்பலை நோக்கிச் செல்கிறான். இடையிலே வந்த ராணியின் தந்தை மால்வான் தளபதியையும் அழைத்துக் கொண்டு காஸண்ட்ராவுக்குச் செல்கிறான்.

காஸண்ட்ராவில் காப்டன் இங்கலண்டின் அறையில் தளபதி, ராணி இருவருடன் அனந்த் இருந்த சமயத்தில் சத்தமின்றிக் கதவு திறக்கப்பட்டு இன்னொரு உருவம் உள்ளே நுழைகிறது. மேலே படியுங்கள்.

---

### அத்தியாயம் 15

### கூனன்

காப்டன் இங்கலண்டின் அறையில் நாற்காலியில் சாய்ந்து கால்கள்இரண்டையும் மேஜை மீது தூக்கிப் போட்டுக் கொண்டு உறங்கிவிட்ட அனந்தைத் தளபதி ஒருபுறமும் ராணி ஒருபுறமும் நின்று நோக்கிக் கொண்டிருந்ததால் அறைக் கதவு திறக்கப்பட்டதையோ, மூன்றாவது ஓர் உருவம் உட்புகுந்து கதவைச் சாத்தியதையோ கவனிக்கவில்லை. அவ்விருவரையும் படுக்கும்படி உத்தரவிட்டுக் காட்டிய கயிற்றுக் கட்டிலையோ, தரையையோ கூட கவனிக்கும் பொறுமை தளபதிக்கு இல்லாததால் அவர் மிகுந்த எரிச்சலுடன் அனந்தின் உறக்கத்தைக் கண்டு வெகுண்டு, "ராணி! இவன் என்ன பைத்தியமா வீரனா?" என்று வினவினார்.

ராணி அதற்குப் பதில் சொல்லவில்லை உடனடியாக. ஆனால் அனந்தின் இதழ்கள் அந்த உறக்கத்திலும் இலேசாக அசைந்தன. "நீ வரலாம் உள்ளே" என்று அவன் உதடுகளிலிருந்து உதிர்ந்த சொற்களைக் கேட்டுத் தளபதி சொன்னார் ராணியிடம், "தூக்கத்தில் உளறல் வேறு? மிக நேர்த்தி" என்று. அவர் குரலில் தட்டிய அலுப்பைக் கண்ட ராணிக்கும் அவன் உறக்கத்தில் ஏதோ பேசுவதாகத் தோன்றவே "எழுந்திருங்கள். யாரை அழைக்கிறீர்கள்?" என்று கேட்டாள் அனந்தை நோக்கி.

அனந்தின் கண்கள் கால்வாசி திறந்தன. அவற்றில் சிற்றம் மிதமிஞ்சி இருந்ததை ராணி, சங்கர் பந்த் இருவருமே கவனித்தார்கள். அந்தக் கால்வாசி விழிப்பில் அவன் சொற்கள் முழுமையாக, நிதானமாக உறுதியாக வெளிவந்தன. "உங்களைப் படுக்கச் சொல்லிப் பல விநாடிகள் ஆகிவிட்டன. இந்தக் கப்பலில் இருக்கும் வரையில் உங்கள் சுய யோசனையை உபயோகப்படுத்தாது இருப்பது நல்லது" என்று சொன்ன அனந்தை வியப்புடன் நோக்கினாள் ராணி. "நீங்கள் உறங்கிவிட்டதாக நினைத்தோம்" என்றாள் ராணி ஏதோ சாக்குச் சொல்ல வேண்டுமென்பதற்காக.

"உறங்காமல் இருந்தால் எதற்காக உளற வேண்டும்? உளறவில்லையானால் யாரை அழைத்தாய்?" என்று சற்று மரியாதையைக் கைவிட்டே கேட்டார் தளபதி.

சில விநாடிகள், பேசவில்லை அனந்த். பேசியபோது அவன் குரலில் ஒரு நிர்மானம் இருந்தது. "இந்தக் கப்பலில் உங்கள் சுயயோசனையை உபயோகப்படுத்த வேண்டாம் என்று சொன்னேன். என் உறக்கத்தை தயவு உறக்கத்தில் உதிரும்



சொற்களையோ நீங்கள் லட்சியம் செய்யாமலிருப்பது கூட நல்லது. நீங்கள் பயங்கரமான எதிரிகளிடம் பலமான கப்பலுக்குள் சிக்கியிருப்பதைப் புரிந்து கொள்ளுங்கள். சரி போய்ப் படுத்துக் கொள்ளுங்கள்., விடியகால் ஜாமந்தானிருக்கிறது. எனக்கும் அவனுக்கும் குறுக்கே சுவர்போல் நிற்காதீர்கள்'' என்று அனந்த் அவர்களை மேஜையின் எதிர்ப்புறத்திலிருந்து விலகுமாறு கைகளால் ஜாடை காட்டினான்.

இப்படி பேசிய பிறகுதான் நான்காவது நபரும் அந்த அறையில் இருக்கிறார் என்பதை உணர்ந்த தளபதியும் ராணியும் சரேலெனத் திரும்பிக் கதவைச் சாத்தி அதன் மேல் சாய்ந்து கொண்டிருந்த மனிதனைக் கண்டார்கள். அவனைக் கண்டதும் தனது கைத் துப்பாக்கியை எடுக்கப் போன தளபதியை, ''தளபதி! அந்தக் கைத்துப்பாக்கியை உறையில் போடுங்கள்'' என்ற அனந்தின் சாவதானக் குரல் அவர் கையைத் தேக்கியது. ''தளபதியாயிருந்தால் முட்டாளாகத்தான் இருக்க வேண்டும் என்ற நியதியில்லை. உம்முடைய துப்பாக்கியின் ஒரே ஒலி நம்மூவரையும் விநாடியில் அழித்துவிடும். அந்த ஒலியைக் கேட்டு டெய்லர், இங்கலண்ட் இவ்விருவரில் யாராவது ஒருவர் உட்புகுந்து துப்பாக்கி ஒலியைச் சாக்காக வைத்து நம்மைத் தீர்த்துக் கட்டிவிடலாம்'' என்று சுட்டிக் காட்டிய அனந்த் ''வழி விடுங்கள். அவன் வரட்டும்'' என்று கூறினான்.

அவன் குரலின் கடுமையையும், அவன் சொற்களிலிருந்த உண்மையையும் கவனித்த தளபதி அறையின் ஒரு மூலையில் இருந்த கட்டிலை நோக்கிச் சென்றார். ராணி ஏதும் பேசாமல் அவரைத் தொடர்ந்தாள். அவர்களிருவரும் அறை மூலைக்குச் சென்றதும் அந்த மூன்றாவது மனிதன் இந்திரஜித்தை நோக்கி மெதுவாக நடக்கத் தொடங்கினான். அவன் நடை பூனை நடையாக இருந்தது. துளிக்கூடச், சத்தமின்றி நடந்தான் அந்த மனிதன். அவன் உடை வெள்ளைக்காரர் உடையாயிருந்தது. ஒரு கிழிந்த ஷர்ட்டையும், நிஜாரையும் போட்டிருந்தான். கழுத்தில் மட்டும் ஒரு சிவப்புக் கர்ச்சீப் கட்டப்பட்டிருந்தது. அவனைக் கண்ட ராணிக்கு மட்டும் அவனை எங்கோ பார்த்திருப்பதாகத் தோன்றியது. அந்த மனிதன் நல்ல உயரமாக இருந்தும் முதுகுக் கூனலால் அவன் உயரம் அளவுக்கதிகமாகக் குறைந்தே தெரிந்தது. அவன் முகம் மிக அழகாயிருந்தாலும் அதன் நெற்றியில் குறுக்கே விழுந்திருந்த ஒரு கத்தி வெட்டு அதன் வசீகரத்தைக் குறைப்பது போல் முதல் பார்வைக்குத் தோன்றினாலும், அந்த முகத்தில் விரிந்த மகிழ்ச்சிச் சாயை அந்த வெட்டுகூட முகத்துக்கு ஒரு தனி அழகைக் கொடுத்திருந்தது இரண்டாவது பார்வையில் புலனாயிற்று. அந்த மனிதன் ஏதோ பலநாள் பட்டினி கிடந்தவன் போல் இளைத்துக் கிடந்தாலும் அவன் நடையிலிருந்த உறுதி அந்த இளைப்பு உண்மையான இளைப்பில்லை என்பதைப் பறைசாற்றிற்று. அந்தக் கூன் ஒன்றுதான் அவன் உடல் அழகைச் சிறிது கெடுத்தது. கூன் அத்தனை அதிகமில்லை யென்றாலும் அவன் நடந்தபோது அசைந்த விலாப்புறங்கள் அவனுடைய துரிதத்தை அந்த ஊனம் பெரிதும் கெடுத்தது போல் தோன்றியது. இத்தனையையும் கவனித்த ராணி இவனை எங்கு பார்த்திருக்கிறோம் என்ற யோசனையில் ஆழ்ந்து கிடந்தாள்.

அனந்தின் அழைப்பின் மேல் அனந்தை நோக்கி நடக்க முற்பட்ட அந்த மனிதன் மிக நிதானமாக அனந்த் கால்களைப் போட்டிருந்த மேஜையை அணுகி வெகு லாகவமாகத் தாவி அந்த மேஜையின் முனையில் ஒருபுறமாக உட்கார்ந்து மே ஒரு காலை ஊன்றி இன்னொரு காலை ஆட்டிக் கொண்டே பேச முற்பட்டான். ''அனந்த்! நீ சொன்னபடி வரவில்லை. மூன்று நாள் கழித்து வந்திருக்கிறாய்'' என்று குற்றம் சாட்டினான் அந்த மனிதன்.

அனந்த் அரைவாசிக் கண்களை விழித்து மேஜை மீது உட்கார்ந்த அந்தக் கூனனை மகிழ்ச்சியுடன் நோக்கிக் கொண்டே சொன்னான், ''எதிர்பாராத காரணங்கள் என்னைப் பாண்டவகட்டில் 'தேக்கி' விட்டன'' என்று.



## உவமை ஞானம்

புகையினால் நெருப்பும்
அழுக்கினால் கண்ணாடியும்
கருப்பையினால் சிசுவும்
மூடப்பட்டிருப்பதைப் போல,
ஆசையினால் ஞானம்
மூடப்பட்டிருக்கிறது.

—ஸ்ரீமத் பகவத் கீதை-V:3

— வ. தேனப்பன்





குழந்தைகள் ஆண்டில் உங்களது குழந்தையும் அதிர்ஷ்டமுள்ளதாக இருக்கலாம்!
இன்றே ஒரு பரிசுச் சீட்டை வாங்கி பரிசுத் தொகையில்
நல்லதொரு பரிசை உங்கள் குழந்தைக்கு வழங்குங்கள்!!
தமிழ்நாடு அரசு
பரிசுச் சீட்டு
சிறப்புக் குலுக்கல்
குலுக்கல்
நாள்
24-11-1979
2 சிறப்பு முதல் பரிசுகள்
ரூ. 5 லட்சம் வீதம்.
3 சிறப்பு இரண்டாவது பரிசுகள்
ரூ. 1 லட்சம் வீதம்
மேலும் அதிக குடும்பங்கள்
இன்பமுற, ஒவ்வொரு
வரிசைக்கும் மற்ற பரிசுகள்
1307லிருந்து 2709 ஆகவும்
பரிசுத் தொகை
ரூ. 2.80லட்சத்திலிருந்து
ரூ. 4.50 லட்சம் ஆகவும்.
அதிகரிக்கப்பட்டுள்ளது.
பரிசுச் சீட்டின் விலை ரூ2
EP-DIPR

அந்த மனிதன் அறை மூலையிலிருந்த ராணியையும் தளபதியையும் நோக்கிவிட்டு அனந்தின் மீது பார்வையைத் திருப்பினான். ''ஒரு காரணம் தெரிகிறது. இரண்டாவது காரணத்தை எதற்காக அழைத்து வந்தாய்?'' என்று கேட்டான்.

அவன் தன்னைப் பற்றியும் தன் தந்தையைப் பற்றியும்தான் பேசுகிறான் என்பதைப் புரிந்து கொண்டதால் ராணியின் முகத்தில் வெட்கத்தின் ரேகை சினத்துடன் கலந்து படர்ந்தது ஒரு விநாடி. மறு விநாடி ராணி பழைய ராணியானாள். எந்த வித உணர்ச்சியையும் காட்டாமல் அவ்விருவரையும் உற்று நோக்கினாள். அந்தச் சமயத்தில் அனந்தின் இதழ்களில் புன்முறுவல் அரும்பியது. அந்தப் புன்முறுவல் அவன் உதடுகளிலிருந்து முகம் பூராவுக்கும் பரவி எத்தனை அழகைக் கொடுக்கிறது என்று நினைத்தாள் ராணி. ராணி என்ற அந்தஸ்தை விடப் பெண் என்ற அந்தஸ்து அவளை ஆட்கொண்டதால் அவன் புன்சிரிப்பைக் கண்டு ராணி பெருமூச்செறிந்தாள்.

அனந்தின் புன்சிரிப்பு மேஜைமீது உட்கார்ந்திருந்த மனிதனையும் கவர்ந்திருக்க வேண்டும். அவன் சொன்னான், ''அனந்த்! இந்தச் சிரிப்பினால் எல்லோரையும ஏமாற்றலாம். என்னை ஏமாற்ற முடியாது'' என்று.

அனந்தின் புன்முறுவல் அதிகமாக விரிந்து இலேசான சிரிப்புக்கு இடம் கொடுத்தது. ''உண்மை. சிரிப்பினால் யாரை ஏமாற்றினாலும் உன்னை ஏமாற்ற முடியாது'' என்று நகைப்பைத் தொடர்ந்து பேசிய அனந்த் ''திட்டப்படி இந்தக் காஸண்ட்ராவுக்கு நீ வந்து விட்டாயல்லவா?'' என்று வினவினான்.

''ஆம். வந்துவிட்டேன்'' என்றான் அந்தக் கூனன்.

''எத்தனை பேரை அழைத்து வந்திருக்கிறாய் உன்னுடன்?'' என்று அனந்த் வினவினான்.

''பதினைந்து பேர். நீ சொன்னது அப்படித்தானே?'' என்று கூனன் வினவினான்.

''ஆம். அந்தப் பதினைந்து பேர்....?'' அனந்த் கேள்வியை முடிக்காமல் விட்டான்.

''இங்கிலண்டிடம் மாலுமிகளாகச் சேவை புரிகிறார்கள்.'' என்றான் கூனன்.

''நல்லது. மிக நல்லது'' என்று பாராட்டினான் அனந்த்.

''நீ எவ்வளவு பேரை அழைத்து வந்திருக்கிறாய்?'' என்று கூனன் கேட்டான்.

''நானும் பதினைந்து பேரை அழைத்து வந்திருக்கிறேன்'' என்ற அனந்தின் பதிலைக் கேட்டதும் அறை மூலையிலிருந்த தளபதி ''அவர்கள் என் வீரர்கள். கொள்ளைக்காரர்கள் அல்ல'' என்றார், எரிச்சலுடன், சற்றுக் கனத்த குரலில்.

அந்த மனிதன் தளபதியை ஒரு முறை கடுமையாகப் பார்த்தான். ''உங்களைக் கேட்கும்போது பதில் சொல்லலாம்'' என்று அதட்டிவிட்டு அனந்தைப் பார்த்து, ''அவர்கள் கொள்ளைக்காரர்கள் இல்லையாமே? அவர்களை அழைத்து வந்து என்ன பயன்?'' என்று வினவினான்.

அனந்த் நகைத்தான் மெல்ல. ''மாலுமிகள் எல்லோரும் கொள்ளைக்காரர்கள். இந்தத் தளபதியும் கொள்ளைக்காரன்தான். இந்த ராணி இருக்கிறாளே, கொள்ளையடிப்பதில் எல்லோரையும் விட அதிகப் பெயர் வாங்கியிருக்கிறாள்'' என்றான் நகைப்பினூடே.

இந்த விவரத்தைக் கேட்ட சங்கர் பந்த் அசந்து போனார். இருப்பினும் ஏதும் பேசாமல் மேலே என்னதான் நடக்கிறது பார்ப்போமென்று மௌனமாக இருந்து விட்டார்.

அனந்தின் பதில் கூனனுக்கு அதிகத் திருப்தி அளித்திருக்க வேண்டும் என்பதை அவன் முக விலாசத்திலிருந்து புரிந்து கொண்டாள் ராணி. அப்படிப் புரிந்து கொண்டும் கூட ''இவனை எங்கு பார்த்திருக்கிறேன்.'' என்று சிந்தித்து அந்தச் சிந்தனையில் ஆழ்ந்து விட்டாள்.

ஆனால் கூனனோ இந்திரஜித்தோ மற்ற இருவரையும் கவனிக்காமலே தங்கள் சம்பாஷணையைத் தொடர்ந்தார்கள். ''ராணியைப் பற்றி நான் கேள்விப் பட்டிருக்கிறேன். இந்தத் தளபதியைப் பற்றியும் அவர் வீரர்களைப் பற்றியும்தான் சந்தேகமாயிருக்கிறது. சமயத்தில் இவர்கள் கை கொடுப்பார்களா?'' என்று விசாரித்தான் கூனன்.

''கைகொடுப்பார்கள். இருப்பினும் நம் வழியில் அவர்களுக்குச் சிறிது பயிற்சி தேவை'' என்றான் அனந்த்.

''அப்படியானால் நானே முதல் அவர்களை என் தலைமைக்கு இழுத்துக் கொள்கிறேன்!'' கூனன் முடிவு திட்டமாக இருந்தது.

''அப்படியே செய்''. அனந்தின் பதிலில் சந்துஷ்டி ஒலித்தது.

''இனிமேல் நீ யார்? நான் யார்?'' என்று வினவினான், கூனன் அனந்தை நோக்கி.

''இருவரும் எதிரிகள்'' அனந்தின் பதில் சட்டென்று வந்தது.

''அதுதான் சரி.''

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

''யார் சொல்லுங்க பார்க்கலாம்?''
''ஜெயமாலினி, ஷோபா, ப்ரியா, ஸ்ரீதேவி சுபாஷிணி இவர்களில் யாரோ ஒருத்தி இல்லே, சரிதானே?''



''வேறு வழியில்லை.''

''ஆம்.''

''அடுத்து என்ன செய்யப் போகிறாய்?''

''தளபதியை என்னுடன் அழைத்துச் சென்று விடுகிறேன்.''

''அது அவசியமா?''

''நமது விரோதத்தை ஊர்ஜிதப்படுத்த அது அவசியம்.''

''அப்படியானால் ராணி என்னுடன் இந்த அறையில் தனித்திருக்க வேண்டுமே?''

''உனக்கு நல்லதுதானே?''

அந்த இருவரின் உரையாடலையும் அது வரை கேட்டுக் கொண்டிருந்த சங்கர்பந்தின் பொறுமை காற்றில் பறந்து விடவே அவர் ராணியைத் தன்னிடம் இழுத்துப் பிடித்துக் கொண்டு ''எங்கள் இருவரையும் பிரிக்க முயலுபவர் யாரா யிருந்தாலும் அவர் உயிர் உடலை விட்டுப் பிரிந்துவிடும்'' என்று சீறினார்.

கூனன் தளபதியை இகழ்ச்சியுடன் பார்த்தான். ''அனந்த்! இந்தப் பைத்தியத்தை அழைத்துக் கொண்டுபோய் நான் என்ன செய்வது?'' என்று வினவினான்.

''அது உன் இஷ்டம்'' என்றான் இந்திரஜித்.

அதைக் கேட்ட தளபதி தாம் இருக்கிற இடம், நிலை, எல்லாவற்றையுமே மறந்து கைத் துப்பாக்கியை நீட்டிக் கொண்டு கூனனை நோக்கி வந்தார். முன் யோசனையின்றி, துப்பாக்கியின் குதிரையையும் வெகு வேகமாக இழுக்க முற்பட்டார்.

கூனன் இருந்த இடத்திலிருந்து அசைய வில்லை. ''சுட்டால் அடுத்த கணம் நீ நிற்கும் இடத்தில் பிணமாகிவிடுவாய்'' என்ற கூனன் குரல் ரகசியமாகவும் பயங்கரமாகவும் ஒலித்தது.

அதன் விளைவாக அவனைக் கவனித்த தளபதி மட்டுமல்ல ராணியும் அதிர்ச்சியின் வசப்பட்டார்கள். தளபதி சுடவில்லை. ராணி செயலிழந்த நிலையில் சிலையென நின்றாள். கூனன் யாரென்பது இருவருக்கும் புரிந்து விட்டது.

(தொடரும்)

---

# Sports picture

**வா**லிபால் இன்று நகர்ப்புறங்களில் மட்டு மல்லாமல் கிராமப்புறங்களிலும் மிகவும் பிராபல்யமாகிக் கொண்டு வருகிறது. கிராமப் புறத்தில் நடந்த ஒரு வாலிபால் பந்தயக் காட்சி இந்த இதழில் இடம் பெற்றிருக்கிறது.

படத்துக்கு உத்ரா தரும் விளக்கம்:

திண்டுக்கல் அருகில் உள்ள அய்யம்பாளையத்தில் உள்ள முத்தாலம்மன் கோயில் திருவிழாவுக்குப் புகைப்படம் எடுக்கச் சென்றிருந்தேன். அந்த ஊரில் நடக்கும் வாலிபால் போட்டிக்கு வந்து படம் எடுக்கவேண்டும் என்று இளைஞர்கள் கோரினார்கள். என்னிடம் அச்சமயம் டெலி லென்ஸ் இல்லை. இருந்தாலும் நார்மல் லென்ஸில் அங்குள்ள வெளிச்சத்தில் 500-8ல் படம் எடுத்தேன். பந்தயம் நடக்கும்போது இரு காட்சிகளை 'கிளிக்' செய்தேன். இளைஞர்கள் உயர எழும்பிப் பந்தைத் தட்டும் காட்சியே என்னைக் கவர்ந்த ஆக்ஷன் படம். உங்களுக்கும் திருப்தியளிக்கும் என்று நம்புகிறேன்.

படம்: உத்ரா — விளக்கம்: குண்டுமணி





# நிகரில்லா வலிமைக்கு—ஏலே லோ
# நிர்லான் வலையிருக்கு—லேசுடா லேசு,
# நீடித்த உழைப்புக்கு—ஏலே லோ
# நிர்லான் வலையிருக்கு—வீசுடா வீசு !



# நிர்லான்

## நைலான் மீன்பிடி வலை மணிக் கயிறு

நிர்லான் ஸிந்தெடிக் ஃபைபர்ஸ் & கெமிக்கல்ஸ் லிட்.,

பதிவு அலுவலகம்:
"நிர்லான் ஹவுஸ்"
254–B, டாக்டர் அன்னி பெஸண்ட் ரோடு.
பம்பாய்-400 025

சென்னை கிளை:
300, மோப்ரேஸ் ரோடு
சென்னை—600 018

லின்டாஸ்-NIR-12-303 TM

# மொரார்ஜி தேசாய்

துறவறம் மேற்கொண்ட மொரார்ஜி தேர்தலை முன்னிட்டு மறுபடியும் அரசியல் அரங்கில் குதித்திருக்கிறார். ஜனதாவுக்கு ஆதரவு தேட.. இவர் துறவறம் திருமாங் கல்யதாரணத்துக்கு முந்திய காரியாத்திரை அளவில்தான் நிறைவேறியது.

நவக்கிரகம் போல் இருந்த பி.எல்.டி. ஜனசங்கம், ஸ்தாபன காங்கிரஸ், சோஷலிஸ்ட் ஆகிய கட்சிகள் ஜே. பி.யின் நன் முயற்சியால் இணைய ஜனதா உருவாகி, பிரமாதமாகக் கொடி கட்டிப் பறந்த மொரார்ஜி,பதவிப் போராட்டத்தில் ஜனதா உடைய அமைச்சரவை ராஜிநாமா செய்ய, அவல நிலையில் நாடும் தாமும் இருப்பதைக் காண்கிறார்.

மொரார்ஜி பிரிவுபடாத பம்பாயின் முதல்வராக இருந்தவர். 'முந்த்ரா' விவகாரத்தில் டி. டி. கே. மத்திய நிதி அமைச்சர் பதவியிலிருந்து ராஜிநாமா செய்ததின் தொடர்ச்சியாய் நேருவால் மத்திய நிதி அமைச்சராக்கப்பட்டவர்.

நேருவின் மரணத்துக்குப் பிறகு இந்திரா பெயர் அடிபட்டபோது தமக்குத்தான் பிரதமர் பதவி அளிக்கப்பட வேண்டும் என்று நியாயபூர்வமாக 'அடம்' பிடித்து; பிறகு லால் பகதூருக்கு விட்டுக் கொடுத்தார். லால் பகதூர் இறந்ததும் மறுபடியும் 'அடம்' பிடித்து இந்திராவுடன் போட்டியிட்டார். காமராஜ் புண்ணியம் கட்டிக் கொண்டார்.

1967 பொதுத் தேர்தலுக்குப் பிறகும் மொரார்ஜியின் 'அடம்' தொடர்ந்தது. இந்திராவுக்குப் பிரதமர் பதவியும், தமக்கு உதவிப் பிரதமர் பதவியும் நிதி இலாகாவும் என்ற உடன்பாட்டுக்கு இணங்கிச் சமாதானம் ஆனார்.

தமது முற்போக்குக் கொள்கைக்கு இவர் இடையூறாக இருக்கிறார் என்று நொண்டிச் சாக்குச் சொல்லி இவரை இந்திரா மந்திரி சபையிலிருந்து விலக்கி, காங்கிரஸை உடைத்தார். (1969ல்) தம்மை முற்போக்குவாதியாகக் காட்டிக் கொள்ள இந்திரா வங்கிகளைத் தேசிய மயமாக்கினார்.

அந்தக் கால ஐ. சி. எஸ். ஆன மொரார்ஜியின் பிடிவாதம் உலகப் பிரசித்தி பெற்றது. பதவிக்காக அடிப்படைக் கொள்கைகளை விட்டுக்கொடுக்காத ஒரே அரசியல்வாதி. 'It was a late cut... but the batsman was too late' என்று கிரிக்கெட்டில் வேடிக்கையாகக் கூறுவது உண்டு. பிரதமர் பதவியை ராஜிநாமா செய்த பின்னர் பல ஜனதாத் தலைவர்கள் வேண்டியும் இவர் ஜனதா பார்லிமெண்டரி கட்சித் தலைவர் பதவியை ராஜிநாமா பண்ணாமல் தாமதித்தது கட்சிக்கு ரொம்பவும் பாதகமாக முடிந்தது.

இயற்கை வைத்தியத்திலும், யூரின் தெராபியிலும் நம்பிக்கை கொண்ட இவர் 'காந்தி தேசாய்' வியாதிக்கு ஏதாவது பச்சிலை மருந்து போட்டிருக்கலாம்!

தங்கத்துக்கும் மொரார்ஜிக்கும் நெருங்கிய சம்பந்தம் உண்டு. நேர்மையான அரசியலில் இவர் ஒரு தங்கம். நேரு காலத்தில் எந்தக் கையால் தங்கக் கட்டுப்பாடு கொண்டு வந்தாரோ, அதே கையால் தமது ஆட்சிக் காலத்தில் தங்கத்தைப் பொதுமக்களுக்கு விற்பனை செய்யும் வழி முறையையும் கொண்டு வந்தார். இரண்டு கொள்கைகளுமே 'பாஸ்கரா' தான்!

இவரது அரசியல் வாழ்க்கையில் சில வேடிக்கையான முரண்பாடுகள் உண்டு.

கம்யூனிஸ்டுகளின் விரோதியான இவர் அவர்களுடன் இந்திராவுக்கு எதிராக இணைந்து செயல்பட்டது ஓர் அதிசயம்.

1969ல் ஜெகஜீவனை ஜனாதிபதியாக்கலாம் என்று காங்கிரஸ் பார்லிமெண்டரி போர்டில் இந்திராவும் அவர் ஆதரவாளர்களும் முன்மொழிந்தபோது, ஜெகஜீவன் 10 ஆண்டுகள் வருமான வரி கட்டாதவர் என்று அவருக்கு எதிராக ஓட்டு அளித்தவர் திரு மொரார்ஜியும் அவரது ஆதரவாளர்களும். இதன் தொடர்ச்சியாய்த்தான் காங்கிரஸ் பிளவு பட்டது. அதே மொரார்ஜி தற்போது ஜெகஜீவன்ராம் பிரதமராக வேண்டும் என்று முழு மூச்சாய் ஈடுபட்டுள்ளார். 'எல்லாக் கொள்ளிகளும் எரிகிறபோது எந்தக் கொள்ளி நல்ல கொள்ளி?' என்ற அடிப்படையில் செயல்படுகிறார் போலும்! — பி. ரங்கநாயகி



# நான் கண்ட ரஷ்யா

அகிலன்

'பிறந்த நாள் உணவுப் பிரச்னையோடு விடிந்து விட்டதே!' என்ற ஏக்கத்தோடு அங்கிருந்து பின்வாங்கப் பார்த்தேன். அந்த வேளை பார்த்து என்னைப் போலவே எங்கெல்லாமோ அலைந்து திரிந்து விட்டுச் சந்திர குப்த வித்யாலங்காரும் அங்கு வந்து சேர்ந்தார். அவரைக் கண்டவுடன் எனக்குச்சற்றுத் தெம்பு ஏற்பட்டது. இருவரும் முன்னேறி ஹோட்டலின் மறு கோடியில் நின்றுகொண்டிருந்த ஒரு பெண்மணியை அணுகி எங்கள் பிரச்னையை வெளியிட்டோம். எங்கள் ஆங்கிலத்தை அவர் புரிந்து கொள்ளாவிட்டாலும், எங்கள் பிரச்னையைப் புரிந்து கொண்டு ஒரு புன்முறுவல் உதித்தார். பக்கத்தில் நின்ற மற்றொரு பெண்மணியிடம் ஏதோ கூறினர். நாங்களும் எங்கள் கைகளை ஆட்டிச் சைகை செய்து, ரொட்டித் துண்டு, வெண்ணெய், தயிர், கிடைத்தால் போதும் என்று அவருக்குப் புரிய வைக்க முயன்றோம். காலைச் சிற்றுண்டிப் பிரச்னை ஒரு வழியாக இனிதே முடிந்தது. ''இது பரிமாறும் நேரம் இல்லை'' என்று அந்த அம்மையார் கருணை இல்லாமல் கையை விரித்திருப்பாரேயானால் எங்கள் பாடு அப்போதைக்கு மிகச் சிரமமாகத்தான் இருந்திருக்கும். நம்முடைய நகரங்களில் உள்ளதைப் போல் அங்கெல்லாம் தெருவுக்கு ஒரு ஹோட்டலைக் காண முடியாது. கிடைத்த இடத்தில் கிடைத்த நேரத்தில் ஒரு கை பார்த்துவிடுவது புத்திசாலித்தனமான காரியம்.

புஷ்கின் கண்காட்சி சாலையைப் பார்த்து விட்டு, மதியச் சாப்பாட்டுக்கு அதே இடத்துக்குத் திரும்பி வந்தோம். இப்போது இந்திய எழுத்தாளர்களான எங்கள் நால்வரோடு, எங்களுக்கு வழி காட்டிகளாக வந்த ரஷ்யப் பெண்மணி மெரீனுவும் இளைஞர் மாலிகோவும் உடன் இருந்தனர். அவர்கள் இருவருமே எங்களை அழைத்திருந்த நோவோஸ்டி செய்தி நிறுவனத்தைச் சேர்ந்த பத்திரிகையாளர்கள்; எழுத்தாளர்கள். மெரீனுவுக்கு முப்பத்திரண்டு வயது. விவாகரத்து செய்து விட்டுத் தாயாரோடு மாஸ்கோவில் வசித்து வருகிறார். இளைஞர் மாலிகோவுக்கு இருபத்தெட்டு வயது. மனைவியோடு மாஸ்கோவில் வாழ்கிறார். இதற்கு முன்பு வழி காட்டிகளாக அவர்கள் இருந்ததில்லை என்றாலும் ஒருவர் மாற்றி ஒருவர் எங்களை நன்றாகவே கவனித்துக் கொண்டார்கள்.

சாப்பாட்டின்போது நான் எதேச்சையாகக் காலையில் நடந்ததைக் குறிப்பிட்டு, பிறந்த நாளும் அதுவுமாக நான் காலையில் உண்ணா விரதம் இருக்க வேண்டிய நிலை வந்திருக்கும்'' என்றேன்.

''என்ன, உங்களுக்குப் பிறந்த நாளா!'' என்று வியப்போடு மெரீனுவும் மாலிகோவும் கேட்டனர்.

''ஆமாம்'' என்றேன்.

''முன்பே சொல்லவில்லையே?''

''வயது அதிகமாவதை யாரும் சொல்வார்களா? இன்றிலிருந்து ஐம்பத்தெட்டு தொடங்குகிறது.''

சாப்பாடு முடிந்து 'பில்' வந்த நேரம் அது. சாப்பாட்டுக்கும் கைச் செலவுக்கும் மட்டிலும் எங்களுக்கு அவர்கள் முன்னதாகவே பணம் கொடுத்து விடுவார்கள். அவரவருக்கு ஆகும் செலவை அவரவர் செய்து கொள்வோம். இம்முறை வந்த 'பில்லை' மெரீனு வாங்கிக் கொண்டு, ''இன்றைக்கு அகிலனுக்குப் பிறந்தநாள்; அதனால் உங்கள் எல்லோருக்கும் இது எங்களுடைய





✖ இந்திய எழுத்தாளர்களுடன் பத்திரிகையாளர் மாலிகோவ் மேல் வரிசை இடது கோடியில்.

✖ பத்திரிகையாளர் மெரீனு அகிலன் பேசுவதை மொழி பெயர்த்துச் சொல்கிறார்.

* சிற்றுண்டி விடுதியில்

விருந்து'' என்று சொல்லி விட்டார். எங்களில் யாரையும் அவர் பணம் கொடுக்க விடவில்லை.

சாப்பாடு முடிந்தவுடன் நாங்கள் விமான நிலையத்துக்குப் புறப்பட்டோம். லெனின் கிராட் உள்நாட்டு விமான நிலையத்துக்கு வந்து சேர்ந்தவுடன் எனக்கு மற்றோர் அதிசயம் காத்திருந்தது. விமான நிலையத்து 'லௌஞ்சில்' ஒரு நாற்காலியில் உட்கார்ந்திருந்தேன். வண்ணக் காகிதத்தாலும் ரிப்பனாலும் சுற்றப்பட்ட இரண்டு பொட்டலங்களை மெரினாவும் மாலிகோவும் என்னிடம் ஆளுக்கொன்றாகக் கொண்டு வந்து கொடுத்தார்கள். ஒன்று. பிளாஸ்டிக் பேழைக்குள் வைக்கப் பெற்றிருந்த பென்சிலுடன் கூடிய அழகிய குறிப்பு பேடு; மற்றொன்று ரஷ்ய எழுத்தாளர் ஒருவருடைய உருவம் பதித்த செப்புக் கேடயம். எனக்காக அவர்கள் வாங்கிய பிறந்த நாள் பரிசுகள்.

சாப்பிட்டவுடன் விமான நிலையத்துக்குப் புறப்படுவதற்கு எங்களுக்கு நேரம் சரியாக இருந்தது. இந்தக் குறுகிய நேரத்துக்கு அவர்கள் அவற்றை எங்கு வாங்கினார்களோ; எப்படி அழகாகச் சுற்றிக் கட்டினார்களோ, தெரியாது. அவர்களுடைய இந்த அன்பு என்னுடைய உள்ளத்தை ஒரு கணம் நெகிழ வைத்தது.

லெனின்கிராடுக்கும் பிளிஸிக்கும் நெடுந்தூரப் பயணம். விமானம் பிளிஸிக்கு வந்து சேருவதற்குள் நன்றாக இருட்டி விட்டது. விமான நிலையத்து ஹோட்டலுக்குச் சென்று மாலிகோவும் மெரினாவும் எதை எதையோ வாங்கிப் பைகளில் நிரப்பிக் கொண்டார்கள். பிறகு நாங்கள் அனைவரும் எங்களுக்காக பிளிஸியில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்த 'அஜாரா' என்ற ஹோட்டலுக்கு விரைந்தோம்.

ஹோட்டலுக்கு வந்து சேர்ந்தபோது இரவு மணி பத்து இருக்கும். என் அறையில் என்னைக் கொண்டு வந்து

## ரஷ்யச் சிரிப்பு






விட்ட மெரீனா, ''சீக்கிரம் உறங்கப் போய் விடாதீர்கள்; உங்கள் பிறந்த நாள் விழாவுக்கு நண்பர்களை அழைத்துக் கொண்டு வந்து விடுகிறேன்'' என்று சொல்லி விட்டுக் கிளம்பினார்.

பிறந்த நாள் இன்னுமா தொடர்கிறது!

அவரவர் அறையில் அவரவர் சாமான்களை வைத்துவிட்டு எல்லோரும் என் அறையில் கூடினார்கள். மாலிகோவும் மெரீனாவும் சுறுசுறுப்பாக நாற்காலி மேசைகளை இழுத்துப் போடத் தொடங்கினர்.

''இந்தியாவில் வீட்டு வேலைகளை எல்லாம் பெண்கள் மட்டுமே கவனிப்பது வழக்கமாமே?'' என்று கேட்டார் மெரீனா.

''ஆமாம்.''

''அப்படியானால் உங்கள் வீட்டுப் பெண்களின் பொறுப்பை இன்று நான் ஏற்றுக் கொள்கிறேன்.''

மேசை விளிம்பின் மேல் எங்கிருந்தோ அவர்கள் கொண்டுவந்த தட்டுகள்; கிண்ணங்கள், தம்ளர்கள் அடுக்கப்பட்டன. கத்திகளும் குத்திகளும் உரிய இடங்களில் வைக்கப்பெற்றன. கேக்குகள், ரொட்டிகள், பழங்கள் மேசையை அலங்கரித்தன. பெரியதொரு 'செம்பெய்ன்' பாட்டில் மேசையின் மையப் பகுதிக்கு வந்தது. விமான நிலையத்து ஹோட்டலில் அவர்கள் இவற்றை யெல்லாம் வாங்கி யிருப்பார்கள் என்பது எனக்கு இப்போதுதான் விளங்கியது.

'ஹாப்பி பர்த்டே!' பாட்டு, பேச்சு, சிரிப்பு, ஒரே கலகலப்பு, குதூகலம்; ஒரே கொண்டாட்டம்! அந்த இரண்டு ரஷ்யர்களிடமிருந்து கொப்புளித்துக் கிளம்பிய உற்சாகம் அந்த அறை முழுவதும் அலை வீசிப் பொங்கிப் பூரித்தது. அவர்களுடைய உல்லாச உணர்ச்சி விரைவில் எங்கள் அனைவரையுமே பற்றிக் கொண்டு விட்டது. மராத்திய எழுத்தாள நண்பர் கர்ஹாத்கருக்குச் 'செம்பெய்ன் பாட்டில் ஒரு புத்திளமையைக் கொடுத்திருக்க வேண்டும். ஒரு வங்காளி, ஒரு ஹிந்திக்காரர், ஒரு மராத்திக்காரர், இரண்டு ரஷ்யர்கள் ஆகிய ஐவரும் சேர்ந்து கொண்டு இந்தத் தமிழனின் பிறந்த நாளை சோவியத் மண்ணில் ஒரு மறக்க முடியாத நாளாகச் செய்து விட்டனர்.

சரேலென்று எழுந்து வந்து மெரீனாவும் மாலிகோவும் என் கன்னத்தில் முத்தமிட்டனர். இது எனக்கு வியப்பைத் தரவில்லை. ஆர்மேனியாவிலும் ரஷ்யாவிலும் வேறு சில பகுதிகளிலும் நண்பர்களைக் கட்டித் தழுவி முத்தமிடுவது அவர்கள் அன்பை வெளியிடும் ஒரு பழக்கம். இதை நான் முன்பே பெற்றுக் கொண்டிருக்கிறேன்; கொடுத்தும் இருக்கிறேன்.

தட்டுக்களையும் மேசையையும் அறையையும் சுறுசுறுப்பாகச் சுத்தப்படுத்தினர் மெரீனா. இரவு சுமார் பன்னிரண்டு மணிக்கு அவர்கள் அனைவரும் என்னிடம் விடை பெற்றுக் கொண்டு திரும்பினார்கள். எதிர் பாராத விதமாக இப்படிக் குதூகலத்துடன் அமைந்துவிட்ட என் பிறந்த நாள் எனக்கு எல்லையற்ற மகிழ்ச்சியைத் தந்தது.

ரஷ்யர்கள் இயல்பாகவே மனிதாபிமானம் நிறைந்தவர்கள். ஒருவருக்கொருவர் உதவி ஒத்தாசை செய்து கொள்வது அவர்களுடைய ரத்தத்தில் ஊறிவிட்ட பண்பு. அதிலும் இந்தியர்களிடம் அவர்களுக்குத் தனிப் பரிவு உண்டு. நமக்குள் சில விஷயங்களில் கருத்து வேறுபாடு இருந்தாலும் நம்மை அவர்கள் உண்மையிலேயே தங்களுடைய உற்ற நண்பர்கள் என்று கருதுகிறார்கள்.

பல்வேறு சின்னஞ் சிறு நிகழ்ச்சிகள் வாயிலாக நான் இதை அறிந்திருக்கிறேன்.

ஹோட்டல்களில் 'லிஃப்டு'க்குக் காத்து நின்றால், 'லிஃப்ட்' வருவதை நன்கு அறிவித்து, நம்மை முன்னே போகச் சொல்லி விட்டுப் பிறகு அவர்கள் நுழைவார்கள். மெட்ரோ பாதாள ரயிலில் நாம் நின்று கொண்டு வந்தால், அவர்கள் எழுந்து நின்று நம்மை உட்காரச் சொல்லி வற்புறுத்துவார்கள். ஒரு பெண்மணி எனக்காக எழுந்து நின்று, நான் தயங்குவது கண்டு என்னைக் கட்டாயப்படுத்தி உட்கார்ந்து வரச் செய்தார். என் நாட்டுக்கும் என் வயதுக்கும் அவர் அளித்த மரியாதை அது.

இந்திய உடையில் நான் பிளிஸியில் நடந்து சென்றபோது என் எதிரே வந்த இரு மாணவிகள் நாணத்தோடு அருகில் வந்து நின்று இரு கரம் கூப்பி வணக்கம் தெரிவித்தார்கள். சுறுசுறுப்பு நிறைந்த தெருவின் பிளாட்பாரத்தில் நின்று ஒரு நாள் மாலை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தேன். சாலையில் வேகமாகப் போய்க் கொண்டிருந்த கார் ஒன்று என் அருகில் வந்து நின்றது. அதை ஓட்டி வந்தவர் ஏதோ தமது மொழியில் என்னிடம் கேட்டார். ''நீங்கள் நேருவின் நாட்டவரா? இந்தியரா?'' என்று கேட்டிருக்க வேண்டும். ''ஆம்; இந்தியன்'' என்றேன் ஆங்கிலத்தில். உடனே காரின் கதவைத் திறந்து விட்டு, ''ஏறிக் கொள்ளுங்கள். நீங்கள் போக விரும்பும் இடத்துக்கு உங்களைக் கொண்டு போய் விடுகிறேன்'' என்று சாடை மூலம் அவர் மொழியில் கூறினார். நான் தெருவோரம் அருகில் நின்ற எங்கள் காரைச்சுட்டிக் காட்டினேன். வணக்கம் கூறிவிட்டுச் சிரித்துக் கொண்டே தம் காரை விரட்டினார் அவர்.

தயாரிப்பாளர்: நம்ம படத்துக்கு ப்ரீமியர் போட்டா என்ன? என்ன யோசிக்கிறீங்க?

டைரக்டர்: ஒண்ணுமில்லே. கொஞ்ச நாள் படம் ஓடுறதையும் கெடுத்திடுவீங்க போலிருக்கே!

- ஆர். கோபாலகிருஷ்ணன்



# குங்குமப் பொட்டுகள் யாவும் ஒரே வகை அல்ல !

சிங்கார் நிச்சயமாக மேன்மையானது
•சன்னமாகவும், சமனமாகவும் அணிந்திடக் கூடியது • எழில் மிகுந்தது • வழிந்து பரவாது
• உலர்ந்ததும் கீறல் விழாது • கறை ஏற்படுத்தாது
• சுகாதார முறையில் தயாரித்தது.

குறிப்பிட்டுக்
கேட்பீர் எப்போதும்

**S சிங்கார்**

முழுமை எழில் கொஞ்சும்,
இந்தியாவின்
உச்ச விற்பனையுள்ள
குங்குமப் பொட்டு.

பாரமௌண்ட் ப்ராடக்ட்ஸ்,
809, ப்ரஸாத் சேம்பர்ஸ்,
பம்பாய் 400 004.






ஸிந்தூர்

everest/638/SH Tam

ஒரு நாள் நாடகம் பார்த்து விட்டுத்திரும்பும்போது இரவு வெகு நேரமாகி விட்டது: டாக்சி கிடைக்கவில்லை. அவ்வழியே சென்ற ஆம்புலன்ஸ் கார் ஒன்றை நிறுத்தி எங்களைச் சுட்டிக் காட்டினார் நண்பர் மாலிகோவ். இந்திய விருந்தினர்கள் ஹோட்டலுக்குப் போகவேண்டும் என்றார். அந்தக் காரோட்டி இன்முகத்தோடு எங்களை ஹோட்டலில் கொண்டு வந்து விட்டுத் திரும்பினார்.

தியேட்டர்களில் கலை நிகழ்ச்சி தொடங்கியவுடன் அங்கெல்லாம் கதவுகளை மூடி விடுவார்கள். அது போலவே இடைவேளை விடும்போதும், நாம் குறிப்பிட்ட நேரத்துக்குள் நம் இடத்துக்குத் திரும்பிவிட வேண்டும். காட்சி மீண்டும் தொடங்கி விட்டால் பார்ப்பவர்களுக்கு இடைஞ்சலாக யாரும் குறுக்கே போகக் கூடாது. கதவுகள் அடைக்கப்பட்டு விடும்.

இடைவேளையில் வெளியே வந்த எங்களுக்கு இந்த விவரம் தெரியாது. தியேட்டரில் இருந்த கான்டீனில் சுவையான தின்பண்டங்கள் இருந்தன. அவற்றைச் சுவைத்துச் சாப்பிட்டதில் காலதாமதம் ஆகிவிட்டது. நாகரிகம் கருதி மொரீனாவும் எங்களை அவசரப்படுத்தவில்லை. திரும்பி வந்து பார்த்தால் கதவுகள் மூடப்பட்டு விட்டன! 'பாதிக் காட்சியுடன் திரும்ப வேண்டியது தானா?

மொரீனா எங்கள் நிலையை அங்கிருந்த நிர்வாகியான பெண்மணியிடம் தெரிவித்தார். அவர் உடனே உள்ளே சென்று தியேட்டரைச் சுற்றி மேலும் கீழும் ஒரு கண்ணோட்டம் விட்டார். எங்கள் பழைய இடத்துக்கே மீண்டும் செல்வது இயலாத காரியம். பலருக்கு இடைஞ்சல் விளைவிக்காமல் அது முடியாது. நல்ல வேளை மேல் மாடி பால்கனியில் இடம் இருந்தது. எங்களை அங்கே அழைத்துச் சென்று உட்கார வைத்தார். வசதியாக அமர்ந்து பார்த்துவிட்டு வந்தோம்.

இப்படி எத்தனையோ சின்னஞ் சிறு செயல்களின் வாயிலாக அவர்களுடைய அன்பையும் மனிதாபிமானப் பண்பையும் என்னால் உணர முடிந்தது. அங்கு நான் கண்ட ஒரு டாக்ஸி டிரைவரின் அன்பைப் பற்றி இந்த ஆண்டு 'கலைமகள்' தீபாவளி மலரில் தனியே ஒரு சிறு கதை எழுதியிருக்கிறேன்:

மனிதர்கள் இயந்திரங்களாக மாறி வரும் இந்தக் காலத்தில் மனிதரை மனிதர் சுரண்டவும் ஏமாற்றவும் கெடுக்கவும் நினைக்கும் இந்தக் காலத்தில் மனிதர்களின் ஆன்மா இன்னும் மாசுபடாமல் இங்கு தூய்மையாக இருப்பதைக் கண்டு நான் இன்புற்றேன். அளவுக்கு மீறிய செல்வமும் மனிதனைக் கெடுத்து விடுகிறது. அளவுக்கு மீறிய வறுமையும் மனிதனைக் கெடுத்து விடுகிறது. இந்த இரு வகைக் கெடுதல்களுக்கும் வாய்ப்பில்லாத சமூக அமைப்பும், மனித நேயத்தை வளர்க்கும் கலாசாரக் கல்வியும், எண்ணிக்கையில் குறைந்த மக்கள் கூட்டமும் இதற்குக் காரணங்களாக இருக்கக் கூடுமென நான் கருதுகிறேன்.

(தொடரும்)




சைனாவில் சமீபத்தில் பரவலாகி வரும் வேடிக்கைத் துணுக்கு இது:

ஒரு மனைவி தன் கணவனிடம், ''மாடியில் என் கைக்குட்டை இருக்கிறது. போய் எடுத்துக் கொண்டு வருவீர்களா?'' என்று கேட்டால் அவன் என்ன செய்வான்?

ஓர் அமெரிக்கக் கணவன் உடனே மாடிக்குப் போய் அதை எடுத்து வந்து அவளிடம் கொடுப்பான்.

ஒரு பிரெஞ்சுக் கணவன் தன்னுடைய கைக்குட்டை ஒன்றை அவளிடம் கொடுத்துவிட்டு, ''இப்போதைக்கு இதை வைத்துக் கொள்'' என்பான்.

ஓர் ஆங்கிலேயக் கணவன், ''உனக்கென்ன, கால் ஒடிந்து விட்டதா?'' என்று கேட்பான்.

ஒரு சீனக் கணவன் தன் குழந்தையை அழைத்து, ''மாடிக்குப் போய் அம்மாவின் கைக்குட்டையை எடுத்து வா'' என்பான்.

ஒரு ரஷ்யக் கணவன் மறுமொழி பேசாமல் மாடிக்குச் சென்று அவள் கைக்குட்டையை எடுத்துக் கொண்டு வந்து கொடுப்பான். பின் அவளைப் பார்த்து, ''காமரேட், மேலே சென்ற போது என் பேனாவை வைத்துவிட்டு வந்து விட்டேன். போய் எடுத்துக் கொண்டு வர முடியுமா?'' என்று கேட்பான்.

-எம். சிவசுப்பிரமணியம்

* * *

சைனாவில் கதை எழுதுபவர்கள் தங்களின் கதைப் போக்கில் சிக்கல்களோ, முடிச்சுக்களோ போடக் கூடாது. குண சித்திர விசித்திரங்களை எந்த இலக்கிய ஆசிரியனும் எடுத்துக் கூறலாகாது.

நல்லவர்கள் மிக நல்லவர்கள், கெட்டவர்கள் மிகவும் கெட்டவர்கள் - நிலைமை இன்னது என்று ஆரம்பத்திலேயே சொல்லிவிட வேண்டும். முடிவு பற்றியும் வாசகர் மனத்தில் எந்த சந்தேகமும் ஏற்படக் கூடாது. எந்தக் கதையாக இருந்தாலும் கடைசியில் துணிவு நிறைந்த கம்யூனிச வீரன் வெற்றி பெற்றதாகக் கதை முடிய வேண்டும்.

– பி. நாராயணன்

# பூர்ணிமா



போட்டிக் கதை - 8

## ஹேமா ஆனந்ததீர்த்தன்

எங்கள் நாடகம் ''கண்ணுமூச்சி'' வெற்றி நடை போட்டுக் கொண்டிருந்தது. மூலக் கதை என்னுடையது என்பதனாலும் எனக்கும் நடிக்கத் தெரிந்திருந்ததாலும் கதாநாயகியின் தகப்பனார் பாத்திரத்தை எனக்கு அளித்திருந்தார்கள்.

இருபத்து நான்கு நிகழ்ச்சிகள் நடந்து முடிந்து வெள்ளி விழா நிகழ்ச்சிக்குத் தேதியும் குறிப்பிட்ட பிறகுதான் கதாநாயகியாக நடித்து வந்த நடிகை எங்களுக்கு ஒரு ஷாக் ட்ரீட்மெண்ட் கொடுத்தாள். அந்தத் தேதியில், தான் தன்னுடைய கிராமத்தில் இருந்தாக வேண்டிய ஓர் அவசர காரியம் இருக்கிறதென்றும் ஆகவே நாடகத்துக்கு வர இயலாதென்றும் கூறினாள்.

நாடகத்துக்கு இன்னும் நான்கு நாட்களே இருந்தன. வேறு ஒரு நடிகையைத் தயார் செய்து நாடகத்தை நடத்துவதும் இயலாத காரியம். வெள்ளி விழா நிகழ்ச்சிகளுக்கான எல்லா ஏற்பாடுகளையும் செய்து விட்டிருந்ததால் நாடகத்தை ஒத்திப் போடுவதோ கான்ஸல் செய்வதென்பதோ நடக்காத காரியம். எல்லோரும் செய்வதின்னதென்று தெரியாமல் தவித்துக்கொண்டிருந்தோம்

இந்த இக்கட்டான நிலையில்தான் எங்கள் டைரக்டர் எங்கிருந்தோ பூர்ணிமாவைப் பிடித்துக் கொண்டு வந்தார்.

''இன்னியிலேயிருந்து மூணு நாளும் தினம் ரெண்டு தடவை ரிஹர்ஸல். ராத்திரி ஏழு மணியிலிருந்து பன்னிரண்டு மணி வரைக்கும். புதுக் கதாநாயகியைத் தயார்செய்துவிடவேண்டும்'' என்று அவர் சொன்னார்.

அதுபோல அன்று இரவு நான் ஒத்திகைக்குப் போனபோது, ''இவதான் பூர்ணிமா'' என்று டைரக்டர் எனக்கு அவளை அறிமுகம் செய்து வைத்தார்.

பூர்ணிமாவைப் பார்த்த நான் அசந்து போய்விட்டேன். இவள் பூர்ணிமாவா அல்லது என் மாலதிதான் உயிர் பெற்று எழுந்து வந்து விட்டாளா? என் கண்கள் என்னை மோசம் செய்கின்றனவா? வைத்த கண் வாங்காமல், திறந்த இமைகளை மூடாமல் அவளையே பார்த்துக் கொண்டிருந்தேன்.

''வணக்கம் சார்'' என்று அவள் கூறியதும்தான் நான் திடுக்கிட்டு, என் அநாகரிக நடத்தைக்காக வெட்கப் பட்டுக் கொண்டே, ''வணக்கம்'' என்றேன். பிறகு கடந்த கால நினைவுகளில் மூழ்கி விட்டேன்.

இருபது வருடங்களுக்கும் முற்பட்ட காலத்து நிகழ்ச்சிகள். இனிமையும், மகிழ்ச்சியும் நிறைந்திருந்து பின்னர் ஒரேயடியாக உருண்ட குடத்திலிருந்து வடிந்த நீர்போல் வெறுமையாகிவிட்ட என் வாழ்வில் ஏமாற்றங்கள்.

மாலதி என் மாமாவின் பெண்தான். எனக்கென்றே பிறந்து வளர்ந்தவள். மாலதிக்கு இருபதும், எனக்கு இருபத்தைந்தும் ஆனவுடன் எங்கள் கல்யாணமும் நிச்சயம் செய்யப்பட்டு ஆடம்பரமாக நடந்தேறியது.

மணமேடையில் என் அருகே அவள் உட்கார்ந்திருந்தபோது நான் வானுலகில் சஞ்சரிப்பது போன்ற போதையில் இருந்தேன். பட்டுப் புடவை உடுத்து, நகைகள் பொலிய, வைரத் தோடுகள் பிரகாசிக்க, கூந்தலில் குடியிருந்த மல்லிகைச் செண்டும் இலேசாகப் பூசியிருந்த பெர்ப்யூமின் மணமும் கலந்து இன்ப வாடை வீச அவள் என் கைகளைப் பற்றியபோது இந்த உலகத்தில் என்னைவிட அதிர்ஷ்டசாலி' ஒருவன் இருப்பானா என்ற இறுமாப்பால் என் நெஞ்சம் விரிந்தது.

அன்று இரவு அவளும் நானும் படுக்கை அறையில் கழிக்கப் போகும் இன்பக் கணங்களை அப்போதிருந்தே என் மனம் எதிர்நோக்கிப் பரபரக்கத் தொடங்கி விட்டது. மணிகளை எண்ணலானேன். நிமிடங்களைக் கணக்கிடத் தொடங்கினேன்.

பிற்பகல் மணி மூன்று இருக்கும். உண்ட களைப்பால் அநேகமாக எல்லோரும் அங்கங்கே படுத்துப் புரண்டு கொண்டு தூங்கியும் தூங்காமலும் நேரத்தை ஓட்டிக்கொண்டிருந்தார்கள். மாலை ரிசப்ஷனுக்கான தயாரிப்பில் சிலர் ஈடுபட்டிருந்தார்கள்.

அப்போதுதான் அந்த அசம்பாவிதம் சம்பவித்தது. வீட்டின் புழக்கடைப் பகுதியிலிருந்து ஒரே கூச்சல்; அழுகை. எல்லோரும் விழுந்தடித்துக் கொண்டு ஓடினார்கள். மாலதி தரையிலே மல்லாந்து படுத்துக் கிடந்தாள். பேச்சு மூச்சில்லை. மயக்கம் என்று நினைத்து முகத்தில் தண்ணீர் தெளித்துப் பார்த்தார்கள். பிரயோஜனமில்லை. டாக்டருக்குச் செய்தி பறந்தது.

மாலதியை நாலு பேர் கைத்தாங்கலாகத் தூக்கிக் கொண்டு வந்து கூடத்தில் படுக்க வைத்தனர்.

''வாயிலே நுரை வந்திருக்காப்போல இருக்கே.''

''இல்லே இல்லே. அது எச்சில்.''

ஒருவருடைய சந்தேகம். மற்றொருவருடைய சமாதானம்.

என்னால் அந்தக் கண்ணறாவியைப் பார்க்கவே முடியாததால் திக்பிரமை பிடித்தவன் போல ஒரு மூலையில் நின்று கொண்டிருந்தேன்.

டாக்டர் வந்தார். எதையெதையோ செய்து பார்த்தார். எதையோ அவன் மூக்கில் வைத்து முகர்ந்து பார்க்கச் செய்தார். பதினைந்து நிமிடங்கள் முயன்று பார்த்துவிட்டு, ஒரு பெருமூச்சினூடும், ''ஐ எம் வெரி ஸாரி'' என்ற வார்த்தைகளாலும் பெரிய கல்லைத் தூக்கிப் போட்டுவிட்டுப் போய் விட்டார்.

மாலதி போய்விட்டாள், வீடு நிறைய அழுகையையும் ஓலத்தையும் நிரப்பிவிட்டு விட்டு.

அன்று மாலை ரிஸப்ஷனுக்கு வந்த நண்பர்கள் என்னை 'கங்க்ராஜுலேட்' செய்வதற்குப் பதிலாக 'கண்டோலன்ஸ்' கூறி விட்டுப் போனார்கள்.

எனக்கு வாழ்க்கையே வெறுத்துவிட்டது. அன்று இரவு நான் எப்படி இருக்க வேண்டும் என்று கனவு கண்டேன். ஆனால் எப்படி இருக்க வேண்டியதாயிற்று என்பதை நினைத்துப் பார்க்கும்போது யாரோ என்னை வஞ்சித்து விட்டது போல் என் உள்ளம் அழுதது, வெகுண்டது.

அதன் பிறகு நான் எதிலும் பற்றில்லாமல் க்ஷவரம் செய்து கொள்ளாமல், ஆடைகளில் கவனம் இல்லாமல், சாப்பாடு பலகாரங்களில் ஈடுபாடில்லாமல் காலத்தைக் கழிக்கத் தொடங்கினேன். பத்திரிகைகளில் வரும் காதல் கதைகளும், ஆபாசப் படங்களும் எனக்கு வெறுப்பை மூட்டின.

சாரியாலயத்தில் நீண்ட நாள் விடுமுறை எடுத்துக்கொண்டு, திருப்பதி, பண்டரிபுரம் ஷிரிடி, மதுரா, ஹரித்வார், காசி, பத்ரிநாத் போன்ற ஸ்தலங்களுக்கெல்லாம் யாத்திரை போய்விட்டு வந்தேன்.



இரண்டு மூன்று வருடங்கள் பேசாமலிருந்த என் பெற்றோர்கள் பிறகு மெதுவாக என்னுடைய மறு விவாகத்தைப் பற்றிப் பேச்சை எடுத்தனர்.

''இந்த ஜன்மத்தில் எனக்கு அது கிடையாது. மாலதியைப் போல் இன்னொருத்தி ஆகமாட்டாள். அதனாலே நானும் இப்படியே காலத்தை ஓட்டப் போகிறேன். மறுபடியும் நீங்கள் என் கல்யாணப் பேச்சை எடுத்தா நான் வீட்டிலே இருக்கப் போறதில்லை. எங்கேயாவது மடத்துலே சந்நியாசியாய்ப் போய்விடுவேன்'' என்று வெறுப்பும் விரக்தியுமாய்ச் சொன்னதும் பயந்து விட்டார்கள்.

நானும் இந்த நாற்பத்தைந்தாவது வருடம் வரையிலும் தனிக் கட்டையாகவே என் வாழ்க்கையை ஓட்டி விட்டேன். காரியாலயத்திலும் மற்ற இடங்களிலும் பல பெண்களுடன் பழகும் வாய்ப்பு எனக்கு ஏற்பட்டுக் கொண்டுதான் இருக்கிறது. ஆனால் இதுவரையில் என் மனத்தில் சலனம் ஏற்பட்டதில்லை.

இன்று இந்தப் பூர்ணிமா என்னுடைய உறுதி வாய்ந்த மனத்தில் ஒரு சலனத்தை ஏற்படுத்தி விட்டதை உணர்ந்தேன். மாலதிக்கு ஒரு குழந்தை பிறந்து வளர்ந்திருந்தால் அது இப்போது இப்படித்தான் இருந்திருக்குமோ என்று எண்ணத் தோன்றியது. ஆனால் பூர்ணிமாவின் பேரில் எனக்கு ஒரு மகளின் பேரில் தோன்றுகிற வாத்ஸல்யம் தோன்றவில்லை என்ற பயங்கர உண்மையையும் நான் உணர்ந்தேன்.

மறைந்துபோன மாலதியே இவ்வளவு காலமும் மறைவாகவே இருந்துவிட்டு இன்றைக்கு மறுபடியும் திரும்பி வந்திருக்கிறளோ என்று நினைக்கும்படியாக இருந்தது.

அன்று ஒத்திகை பார்க்கும்போது பல முறை அவளை அப்படியே வாரி அணைத்துக் கொண்டு, ''நீ மாலதிதானே, நீ என் மாலதிதானே?'' என்று அவள் காதுகளில் ரகசியமாகக் கேட்க வேண்டும் என்று என் கைகளும் உதடுகளும் பரபரத்துக் கொண்டிருந்தன.

அன்று இரவு வீட்டில் வந்து படுத்த எனக்குத் தூக்கமே வரவில்லை. விபரீதமான பல எண்ணங்கள்.

''பூர்ணிமாவை நான் மணந்து கொண்டு விட்டால் என்ன?''

''சே, சே! அவளுக்கு வயது இருபத்தி ஒன்றோ, இரண்டோ. எனக்கு வயது நாற்பத்தியஞ்சு.''

---

''மூணு வயசுக் குழந்தைக்கு சபாவிலே ஆட சான்ஸ் கேட்கிறீங்களே. முன்னாடி ஆடிப்பழக்கம் இருக்குதுங்களா?''

''ஓ! தினம் தொட்டிலிலே ஆடிண்டுதான் இருப்பாள்!''

-அ. இராமதாஸ்



''அதனால் என்ன? அவளுக்கு இஷ்டமானால் சரிதானே?''

''வேண்டாம், வேண்டாம். ஓர் இளம் பெண்ணை நாம் அப்படியெல்லாம் கேட்டு அவமானப்படுத்தக் கூடாது.''

இப்படியே முடிவற்ற சர்ச்சைகள் என் மனத்துக்குள்ளாகவே எழுந்தன.

இரண்டாவது நாள் ஒத்திகை, மூன்றாவது நாள் ஒத்திகையெல்லாம் முடிந்த பிறகு என் மனதில் கட்டுக்கடங்காமல் போய் விட்டது. ஜுரம் வந்தாற்போல் உடம்பெல்லாம் வெப்பத்தால் தகித்தது.

பூர்ணிமா இல்லாமல் என்னால் வாழவே முடியாது என்றும், மாலதியே எனக்காக இரண்டாவது ஜன்மம் எடுத்துப் பூர்ணிமாவாக வந்திருக்கிறாள் என்றும் எனக்குத் தோன்றத் தொடங்கி விட்டது.

நாடகத்தன்று சந்தர்ப்பம் பார்த்து அவளுடன் பேசி அவள் மனத்தை அறிந்து கொண்டுவிட வேண்டும் என்று உறுதி பிறந்து விட்டது என் மனத்தில்.

நாடகம் ஏழு மணிக்கு ஆரம்பம். ஆறு மணியிலிருந்து நடிகர்கள் ஒப்பனை செய்து கொள்ளத் தொடங்கி விட்டார்கள்.

பூர்ணிமா ஓர் அழகுத் தேவதையாகவே தோன்றினாள். அள்ளிப் பருக வேண்டிய சௌந்தரியம் ஆறாக ஓடிக் கொண்டிருந்தது அவள் உடலெங்கும்.

நாடகத்துக்கான முதல் மணி அடித்து விட்டார்கள்.

மேடையில் பூஜை நடந்தது. நடிகர்கள் எல்லோரும் தீபாராதனையைப் பார்த்துவிட்டுக் கற்பூர ஜோதியைக் கைகளால் தொட்டுக் கண்களில் ஒற்றிக் கொண்டார்கள்.

பூர்ணிமாவும் அப்படியே செய்தாள். பிறகு நேரே என் அருகில் வந்தாள்.

''சார் கொஞ்சம் இப்படி வரீங்களா?'' என்று கேட்டாள்.

நெஞ்சு 'பட் பட்' என்று அடித்துக்கொள்ள அவளைப் பின்தொடர்ந்தேன்.

ஓர் ஒதுக்குப்புறமாகச் சென்றடைந்ததும் பூர்ணிமா என் முன்னால் நின்று கொண்டு குனிந்து என் பாதங்களைத் தொட்டு, அந்த விரல்களைத் தன் கண்களில் ஒற்றிக் கொண்டாள்.

''என்னம்மா இது? டைரக்டரை எல்லாம் விட்டுட்டு?''

''இல்லே சார். இந்த ட்ரூப்பிலேயே எல்லாரையும் விட வயசானவங்க நீங்க. உங்களைப் பார்க்கறப்பவே ஒரு மரியாதை தோணுது மனசிலே. நாடகத்துலேயும் நீங்க எனக்கு அப்பா. நீங்க ஆசீர்வாதம் பண்ணு எங்க அப்பாவே ஆசீர்வாதம் பண்ண மாதிரி சார்'' என்றாள்.

''நல்லா நடிச்சு நல்ல பேர் எடும்மா'' என்று அவளை ஆசீர்வதிக்கும்போது என் தொண்டை தழுதழுத்தது ஏமாற்றத்தினாலா, அவள் பேரில் அந்தக் கணத்தில் தோன்றிய இயபர் அன்பினாலா என்று எனக்கே தெரியவில்லை.

ஆனால் சஞ்சலமுற்றிருந்த என் மனம் அதன் பிறகு பழையபடி அமைதியடைந்து விட்டதை மட்டும் உணர்ந்தேன்.

ஒரு மங்கையின்
வாழ்வில் மிக இனிமையான
நேரங்களில்
இணைந்திருப்பது கட்டாவ்.

கட்டாவின் டெர்கோஸா ஸாரிகள் 



சென்னை புரசைவாக்கம் யூனைடெட் கமர்ஷியல் பாங்க் மானேஜர் ஸ்ரீ G. D. சீதாராம் அவர்களின் குமாரத்தி சௌபாக்கியவதி மாலதிக்கும் சிரஞ்சீவி ஜெகதீஷுக்கும் பெங்களூரில் சமீபத்தில் வெகு சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்



# கல்கி

## சந்தா விவரம்

★

| | ஓராண்டு | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 46 | ரூ. 23 |
| இலங்கை (இந்திய நாணயப்படி) | ரூ. 64 | ரூ. 32 |
| இதர வெளிநாடுகள் | ரூ. 100 | ரூ. 50 |

**மானேஜர்**

கல்கி, சென்னை - 600 032

கற்கரை யும்படி கரைவிக்கும் கருத்தே
கண்மணி யேமணி கலந்தகண் ஒளியே
சொற்கரை யின்றிய ஒளியினுள் ஒளியே!
துரியமும் கடந்திட்ட பெரியசெம் பொருளே
சிற்கரை திரையறு திருவருள் கடலே
தெள்அமு தேகனி யேசெழும் பாகே
சர்க்கரை யேஅது சார்ந்தசெந் தேனே
தனிநட ராசஎன் சற்குரு மணியே!

— திருஅருட்பா



# கோல்மாலில் ஒரு கோல்மால்?



'கோல்மால்' கொடி கட்டிப் பறந்து கொண்டிருக்கும் ஹிந்தி நகைச் சுவைப் படம். இப்படம் சம்பந்தமான ஒரு சர்ச்சையைக் கிளப்புகிறார் ஹிந்து தியாலாஜிகல் உயர்நிலைப் பள்ளி ஆசிரியராக இருக்கும் ஆர். பானு.

''என்னுடைய நண்பர்கள் எல்லாம் 'கோல்மால்' படத்தைப் பார்த்து விட்டு வந்து, 'பானு! நீ மேடை நாடகமாகப் போட்ட 'கேஷுவல் லீவ்'தான் 'கோல்மால்!' என்று சொல்ல ஆரம்பித்தனர். உடனே நானும் 'கோல்மால்' படம் பார்த்தேன். ஆடிப்போய்விட்டேன்.

1964ம் வருஷம் எழுதி, நாடகமாக அரங்கேற்றினோம் 'கேஷுவல் லீவ்' நாடகத்தை. விஜய் தியேட்டர்ஸ் என்ற பெயரில் நண்பர் ஜெகதீசன் இந்நாடகத்தைத் தயாரித்தார். கதை வசனம் என்னுடையது. நாடகம் சபாக்களில் நல்ல வரவேற்பைப் பெற்றது. காலஞ்சென்ற சசிகுமார் நடித்தார். சில சமயங்களில் தில்லே ராஜன் நடித்தார். 1976ம் ஆண்டு சசிகுமார் மறைவு வரை இந்த நாடகத்தைப் போட்டிருக்கிறோம். சுமார் 120 தடவைக்கு மேல் இந்நாடகம் மேடை ஏறிச் சென்னை ரசிகர்களின் அமோக வரவேற்பைப் பெற்றுள்ளது. வானொலியிலும் 1971ம் ஆண்டு ஒலிபரப்பப்பட்டுள்ளது. அமெச்சூர் குழுக்கள் சிலவும் இந்நாடகக் கதையை பம்பாய், டெல்லி, அகமதாபாத் போன்ற இடங்களில் மேடை ஏற்றியுள்ளனர். திரை உலகில் ஜெமினி, ஜெய், மேஜர், காத்தாடி, சித்ராலயா கோபு, சக்கரவர்த்தி ஆகியோருக்கெல்லாம் இந்த நாடகம் பற்றி நன்கு தெரியும்.

✖ ஆர். பானு

கோல்மால் படத்தை எடுத்த என். ஸி. சிப்பிக்கு இம்மாதிரியான ஒற்றுமை பற்றி நான் கடிதம் எழுதினேன். அதற்கு அவர், தமக்கு என் நாடகத்தைப் பற்றித் தெரியாது என்றும், வங்காளத்தில் வெளியான 'கரமாச்சி' (Karamachi) என்ற படத்தை ஹிந்தியில் எடுக்கத் தாம் உரிமை வாங்கி, 'கோல்மால்' எடுத்ததாகவும், அந்த வங்காளிப் படக் கதையை எழுதியவர் 'சைலேஷ் டே' என்றும் பதில் கடிதம் போட்டுள்ளார்.

கே. பாலசந்தர் தமிழில் இப்படத்தைத் தயாரிக்க உரிமை பெற்றுள்ளதை அறிந்து அவரிடம் என் நாடகத்தைப் பற்றிச் சொன்னேன். ஒரு கணம் மலைத்துப் போனவர் போல் தோற்றமளித்துவிட்டு, 'உங்கள் கதை வசனத்தைக் கொண்டு வாருங்கள் பார்க்கிறேன்' என்றார். தொடர்ந்து 'ஏதோ வங்காள நாடகத்தைத்தானே தாம் வாங்கி கோல்மால் தயாரித்ததாக சிப்பி சொன்னார்?' என்றார்.

தமிழ் எழுத்தாளர்களின் நிலையைப் பார்த்தால் மிகவும் வேதனையாக இருக்கிறது!

பேட்டி: நாயகன்



''ஓர் உத்தமமான பெண்ணின் மனம் எப்படி இருக்கும் என்பதை நீ எனக்குக் காட்டினாய். நான் எங்கே இருக்க நேர்ந்தாலும் அங்கே உன்னை எதிர்பார்க்கிறேன். சந்தோஷமாக இரு. வாழ்க்கையில் மகிழ்ச்சியை நிரப்பிக் கொள். பிள்ளைகளை அன்புடன் கவனித்துக் கொள். என் நினைவைக் காத்துக்கொள். ஆண்டவன் உனக்கு அருளட்டும்.''

-தான் இறந்த பிறகு தன் மனைவியிடம் சேர்ப்பிக்கச் சொல்லி சர்ச்சில் கொடுத்த ஒரு கடிதத்தின் கடைசி வாக்கியங்கள். அவர் எழுதிய கடிதங்களிலேயே பிறர் மனத்தைத் தொட்டது இந்தக் கடிதம்தான் என்று சொல்கிறார்கள்.

— ஸண்டே டெலிகிராப் —முத்து

# ஒரு வளைவில் சில வக்கிரங்கள்!

கோமதி ஸ்வாமிநாதன்



அவர்கள் பயணம் செய்து கொண்டிருந்த சுற்றுலாப்பேருந்து மலை ஒன்றின் மேல் இடம் பிடித்து அமர்ந்திருந்த ஆண்டவனைக் காட்டிவிட்டு அடுத்த புண்ணிய ஸ்தலத்துக்குப் போகச் சமவெளியை நோக்கி இறங்கிக் கொண்டிருந்தது. அதிக வளைவுகள் கொண்ட மலைப் பாதை அது.

சிலர் குடும்பத்துடன் பிரயாணம் செய்தார்கள். சிலர் பேருந்தில் ஏறி அமர்ந்த பிறகு அறிமுகம் செய்து கொண்டு பழக ஆரம்பித்தார்கள். சிலர் தனிக் கட்டைகளாக ஒதுங்கி நின்றும் பிரயாணத்தை அனுபவித்தார்கள்.

இருபத்தி ஐந்து. இருபத்தி ஆறும் நம்பர் இருக்கைகளில் ரகுபதியும் அவர் சம்சாரமும் அமர்ந்திருந்தார்கள். ரகுபதி சென்ற வருஷம்தான் தம் சஷ்டியப்த பூர்த்தியை அமர்க்களமாகக் கொண்டாடியிருந்தார். பெரிய உத்தியோகத்திலிருந்து ஒழுங்கான வயதில் ஓய்வு பெற்றவர். இரண்டு பிள்ளைகள் அமெரிக்காவிலிருந்தும் ஹாங்காங்கிலிருந்தும் டாலர்களை அள்ளி அள்ளி அனுப்பி அவருடைய பாங்குக் கணக்கை வழிய விட்டுக் கொண்டிருக்கிறார்கள். டில்லியில் அலுவல் பார்க்கும் மூன்றாவது பிள்ளைக்குக் கல்யாணம் நிச்சயம் செய்த கையோடு இந்த ஸ்தல யாத்திரையை நண்பர் ஒருவர் கொடுத்த தகவலின் பேரில் இந்தக் குழுவுடன் மேற்கொண்டார்.

அந்தத் தரிசன நினைவுகளில் சிந்தனையைச் சுழல விட்டுக் கொண்டே பாதிக் கண்கள் மூடியவாறு உட்கார்ந்திருந்தார்.

''அதோ உட்கார்ந்திருக்கும் கனகாம்பரம் வைத்துக் கொண்டிருக்கும் பெண்ணின் காதைக் கொஞ்சம் கவனியுங்கோ'' என்று ரகுபதியின் விலாவில் முழங்கையால் மெதுவாக இடித்தாள் திருமதி பர்வதம் ரகுபதி.

ரகுபதியின் நினைவு எங்கோ இருந்தது. ''கனக துர்க்கா கோயில் பார்க்க வேண்டியது தான். விஜயவாடாவிலேதானே என் மருமான் இப்போ டிரான்ஸ்பர் ஆகிவந்து தங்கியிருக்கான். போயிட்டு வரலாம்'' என்றார் முக்கால் கண்களைத் திறந்து.

''கனகதுர்க்காவும் இல்லே! கனகதாராவும் இல்லே! காது தோடு! அந்தப் பெண் காதில் இருக்கும் மோஸ்தர் நன்றாக இருக்கிறது. இமிடேஷன் தோடுதான். ஆனால் அதுவே வைரமாக இருந்தால் எட்டாயிரத்துக்கு ஆகும்! எனக்கு ரொம்பப் பிடிச்சிருக்கு!'' என்றாள் பர்வதம்.

''நீ இனிமேல் போய் இமிடேஷன் கல் தோட்டுக்கு ஆசைப்பட்டு வாங்கிப் போட்டுக்கொண்டால்....''

ரகுபதியை முடிக்கவிடவில்லை பர்வதம்.

''நம்ப சீதாராமுக்குப் பார்த்திருக்கிற பெண் அந்த மாதிரி வைரத் தோடு போட்டுக் கொண்டு வரவேண்டும். ஊருக்குத் திரும்பியவுடன் சம்பந்தி வீட்டுக்குச் சொல்லி அனுப்பிடுங்கோ.

''திடீரென்று செலவு திட்டங்களில் நாலாயிரத்தைக் கூட்டு என்றால் அந்த மனுஷன் என்ன பண்ணுவார்? அதை யோசித்தாயா?''

''நாம் வேறு மருமகளைத் தேடிப்போகலாம்!''

பஸ் ஒரு வளைவில் சர் என்று திரும்பியது.

ரகுபதி கண்களை அகல விரித்துப் பார்த்தார். ''பர்வதம்! திருமணமான பிறகு புருஷன் செய்யும் பாப புண்ணியங்களை மனைவி பகிர்ந்து கொள்கிறாள். அதே மாதிரி மனைவி செய்யும் காரியங்களிலும் புருஷனுக்குப் பங்கு உண்டு. நான் ஏதோ புண்ணியமாகச் செய்து கொண்டிருக்கிறேன் என்ற நினைவு. எனக்குப் பாதி போய் விடுகிறது. நீ செய்யும் காரியங்களில் பாதிப் பங்கு விளைவு எனக்கு. கணக்குப் பார்த்தால் என் பகுதியிலும் நிறையப் பாப அக்கவுண்டுதான் ஏறும்போல இருக்கிறது'' என்றார் நிதானமாக.

''தினம் ஏதோ கதை கேட்கிறேன் என்று போய் உட்கார்ந்து உங்கள் புத்தி மழுங்கிப் போச்சு!'' என்றாள் பர்வதம்.

கடைசி வரிசையில் தீவிர யோசனையில் ஆழ்ந்தவாறு பாஸ்கரன் உட்கார்ந்திருந்தான். ஜன்னல் ஓரத்து ஆசனம் அவன்தான் இந்தச் சுற்றுலாவுக்கு ஏற்பாடு செய்தவன். மத்திய அரசு இலாக்கா ஒன்றில் அலுவல் பார்த்துக் கொண்டே இந்தச் சுற்றுலா ஏற்பாடுகளை ஒரு பக்கவாட்டு வருமானத்துக்கு நடத்தி வந்தான். ஆண்டுக்குக் குறைந்த பட்சம் மூன்று பிரயாணங்களுக்கு ஏற்பாடு செய்வான். அவனும் அவன் குடும்பத்தினரும் இலவசமாகப் பிரயாணம் செய்வது தவிர அவனுக்குப் போனஸாக ஆயிரம் ரூபாய் தேறும்.

''என்ன பாஸ்கர்! ஏதாவது பிராப்ளமா?'' என்று கேட்டான் பக்கத்திலிருந்த கணேசன். அவன் இந்தச் சுற்றுலா ஏற்பாடு 'பிஸினஸை' பாஸ்கரனிடம் பயிற்சியாளனாக இருந்து கற்றுக் கொள்கிறான். அவன் ஒரு மாநில அரசு ஊழியன்.

''பிராப்ளம் இல்லாமல் ஒரு விஷயம் நடந்துடுமா? நாளைக்கு மறு நாள் ஊர்ப் போய்ச் சேர்ந்ததும் பஸ் கம்பெனிக்கு ஆயிரம் ரூபாய் கொடுத்தாக வேண்டும். ஒரு மணி நேர தவணை கூடச் சொல்லக் கூடாது. கையில் பத்து ரூபாய் கூட இருக்




காதே! இது ப்ராப்ளம் இல்லையா?'' என்றான் பாஸ்கரன்.

''இந்தத் தடவை நல்ல கலெக்ஷனாயிற்றே? நல்ல லாபம் என்று போன மாதம் ஒரு கணக்குப் போட்டாயே?'' என்றான் கணேசன்.

''கணக்குப்படி லாபம்தான்! ஆனால் புறப்படுவதற்கு இரண்டு நாட்களுக்கு முன்னாலே நான் சீட்டாட்டத்திலே ஒரே ராத்திரியிலே ஆயிரத்து நானூறு ரூபாயைத் தோற்று விட்டேன் என்பதை இந்தப் பிரயாணக் கணக்கில் எப்படிக் காட்டுவது?''

பாஸ்கரன் முகவாய்க்கட்டையைத் தடவிக் கொண்டான்.

''ஏன் பாஸ்கரன்! மூன்றும் வருஷம் ஹரித்வாரில் ஒரு நாடகம் போட்டாயே! காலி பர்சைக் கங்கையில் நழுவ விட்டுவிட்டு 'ஐயோ இரண்டாயிரம் போச்சே' என்று புலம்பிப் பிரயாணிகளிடம் தொள்ளாயிரம் வரை வசூல் செய்தாயே! அது மாதிரி....'' கணேசன் நீட்டினான்.

''நோ! நோ! இங்கே கங்கையுமில்லை! மேலும் அந்த ஹரித்வார் டிரிப்பில் வந்தவர்களில் நான்கு பேர்கள் இந்தச் சுற்றுலாவிலும் கலந்து கொண்டிருக்கிறார்கள். அப்புறம் குட்டு உடைந்து விடும். பார்க்கிறேன்! ஏதாவது வழி தென்படும்'' என்று பலத்த சிந்தனையில் மூழ்கினான்.

**ப**ஸ் இன்னொரு வளைவைத் தாண்டியது.

குமுதவல்லி பஸ்ஸின் முன் பகுதியில் ஓர் இடத்தைப் பிடித்து உட்கார்ந்தாள். ஒரு தனியார் அலுவலகத்தில் பணி புரியும் அவள் நல்ல தோற்றமுடையவள். தனியாகத்தான் இந்தப் பயணத்தை மேற்கொண்டிருந்தாள். அவளுக்கு மனம் நிம்மதி பெற இந்தச் சுற்றுலாவை மேற்கொண்டிருந்தாள்.

குமுதவல்லி காதலித்து ஒரு வாலிபனைத் திருமணம் செய்து கொண்டவள். அவன் மகா அயோக்கியன் என்று அவளுக்கு எப்

டபியோ அசைக்க முடியாத நம்பிக்கை விழுந்திருந்தது. அதிகம் வீட்டின் எதிர்ப்புக்களைப் பொருட்படுத்தாமல் நான்கே நண்பர்கள் சாட்சி நிற்க ஏதோ ஒரு கோவில் சந்நிதியில் அவன் கையிலிருந்த தாலியைத் தன் கழுத்தில் மாட்டிக் கொண்டாள்.

பத்து நாள் தேன் நிலவு. இருபது நாள் தனிக் குடித்தனம். முப்பதாம் நாள் முடிவில் அவள் அவனிடம் வைத்திருந்த அத்தனை நம்பிக்கையும் நுஸ் கட்டி போலக் கரைந்தது. அன்றுதான் அவன் ஏற்கனவே திருமணமானவன் என்றும் அந்த மனைவியும் பட்டினத்திலேயே மற்றொரு பகுதியில் வசிக்கிருள் என்றும் தெரிய வந்தது.

ஏமாற்றத்தை வெறுப்பாக மாற்றினுள். ஆத்திரத்தை அவசரமாக மாற்றினுள். அடுத்த முப்பது நாட்களுக்குள் விவாகரத்தையும் பெற்று விட்டாள்.

அவள் சக ஊழியர்களின் கண்களில் அவள் ஒரு வீராங்கனையாகக் காட்சியளிப்பதற்குப் பதிலாகக் கடையில் விலைக்கு வந்த சரக்காகத் தோன்றினுள். சிலருடைய அசட்டுப் பற்கள் அநாவசியமாக எட்டிப் பார்த்தன. அதைக் கொஞ்சம் மறப்பதற்காகத்தான் இந்தப் பிரயாணத்தை அவள் மேற்கொண்டாள்.

இந்த விஷயம் குமுதவல்லி பணி செய்யும் காரியாலய ஊழியர் ஒருவர் மூலம் தாண்டவராயன் காதில் விழுந்தது. அவனுக்குக் கொஞ்சம் பூர்வீக வசதி உண்டு. தன் ஸ்கூட்டரை பிரிதிவிராஜன் குதிரையாக நினைத்து, நினைத்தபோதெல்லாம் கூட்டம் நிறைந்த நகர பஸ் ஸ்டாப்புகளின் அருகில் நின்று சம்யுக்தைகளைத் தேடும் சபலம் உள்ளவன். குமுதவல்லியை அவன் பார்த்திருக்கிறுன். பார்த்துக் கிறங்கியுமிருக்கிருன். ஆகவே இந்தச் சந்தர்ப்பத்தை நழுவ விடாமல் பாஸ்கரை நெருங்கி வேறு ஓர் ஆசாமியை விலக்கி விருந்து கழற்றச் செய்து அந்த இடத்தைப் பிடித்துக் கொண்டான். சுற்றுலா முடியு முன்பு குமுதவல்லியை வளைத்துப் போட வேண்டும் என்ற திட்டம்.

ஒரு கோயில் சிலையின் பக்கத்தில் சற்றுத் தனித்துக் குமுதவல்லி நின்று ரசித்தபோது தாண்டவராயன் துணிந்து நெருங்கிச் சிலையின் கொண்டையைத் தடவியவாறு, "உயிர்த் துடிப்புள்ள இந்த அழகுப் பதுமைகளுக்கும் சிலையாகி நிற்கும் உங்கள் எழிலுக்கும் எந்த வித்தியாசமும் இல்லை" என்று கண்களைச் சிமிட்டித் தன் ஆசையை வெளிப்படுத்திக் கூறி வைத்தான்.

குமுதவல்லி ஒரு கணத்துக்கும் குறைவாகத்தான் திகைத்தாள். "கோவிலுக்குள் செருப்பு மாட்டிக் கொண்டு நான் வரவில்லை என்ற தைரியத்தில் பேசுகிறீரா?" என்று அழுத்தமாகச் சீறிவிட்டுச் சற்றுத் தள்ளிப் போய்க் கொண்டிருந்த ரகுபதியிடம் சேர்ந்து கொண்டாள்.

மூக்குடைந்த தாண்டவராயன் மனத்துக்குள் புகைந்தான். வெடித்தான். ஊர் திரும்பியதும் இவளை எப்படி மடக்கி அவதூறு கற்பிக்கலாம் என்ற திட்டத்திலேயே மூழ்கிக் கிடந்தான். இப்போதும் அந்த நினைவுதான்.

**பஸ்** இன்னொரு வளைவைத் தாண்டியது.

பாஸ்கரன் இரும்பு வியாபாரி வேலுச்சாமி பெட்டியில் அகஸ்மாத்தாகப் பார்த்த பல நூறு ரூபாய் நோட்டுக்களில் சிலவற்றை எப்படித் தன் கைக்கு மாற்றலாம் என்று யோசிக்க ஆரம்பித்தான். கடனாக அல்ல! களவாக!

டஸ் டிரைவர் பீதாம்பரம் இடைவழியே மதுவிலக்கு அமுலில்லாத இடத்தில் 'ஸ்பேராக' ஒரு கால் புட்டி பிராந்தி வாங்கித் தன் ஆசனத்து மெத்தை ஓரத்தில் பதுக்கி வைத்திருந்தான்.

பஸ் சமவெளிக்கு வந்த பிறகு ஓரிடத்தில் செக் போஸ்ட் வரும். அங்கு கொஞ்சம் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். அந்தச் சிறு பாட்டிலை இன்னும் உள்ளே தள்ளிப் பதுக்க வேண்டும்.

அதற்காக அவன் கொஞ்சம் வலது கையை ஸ்டியரிங்கிலிருந்து அகற்றி உடம்பைக் கொஞ்சம் நெளித்தான். கால் கணம் கூட இருக்காது. அவனுக்கு ஒரு தலை சுற்றல். உடம்பே ஆடியது. பிரேக் கட்டையிலிருந்த கால் ஆக்ஸிலரேட்டர் கட்டைக்கு மாறிவிட்டது. இடது கையும் ஸ்டியரிங்கை விட்டு மேலே போய்விட்டது.

பஸ் அடுத்த வளைவைத் தாண்டவேயில்லை. சாலை ஓரமாகப் பாய்ந்து ஐம்பதடிப் பள்ளத்தில் பல்டி அடித்துக் குட்டிக்கரணம் போட்டு விழுந்தது. விழுந்த இடம் பாறை. அடுத்த கணம் எங்கும் ஜ்வாலை. ரகுபதியும் பார்வதமும் தாண்டவராயனும் இதரரும் சிதறி உதிர்ந்து வீரர்களாக உருண்டனர்.

யாருக்குமே உயிருடன் சம்பந்தமில்லை. பஸ் வெடித்துக் கரைந்து கொண்டிருந்தது.

---

அவன்: "இல்லஸ்டிரேட்டட் வீக்லியின் முன்னுள் ஆசிரியருக்கு உற்சாகம் வந்தால்...?"
இவன்: "குஷி வந்த சிங்காக இருப்பார்!"

இரா. ஞான சௌந்தரி

இப்பொழுது நடைபெறுகிறது!

சென்னை
தேவிபாரடைஸ் 70 MM A/C
ஈகா A/C
பகல் 12-00 மணி காட்சி மட்டும்
லிட்டில் ஆனந்த் A/C
தினசரி 4 காட்சிகள்
1, 4, 7, 10 மணி
ஸ்ரீகிருஷ்ணா
தினசரி 3 காட்சிகள்
மற்றும் தென்னகமெங்கும்



P.S.V. பிக்சர்ஸ்

# திசை மாறிய பறவைகள்

கதை-வசனம்-டைரக்ஷன் S. ஜெகதீசன் தயாரிப்பு P.S. வீரப்பா, P.S.V. ஹரிஹரன்

இசை: M.S. விஸ்வநாதன் ஒளிப்பதிவு: N. பாலகிருஷ்ணன்

# ராஜாஜி வாழ்க்கை வரலாறு

✿ ராஜ்மோகன் காந்தி ✿

சட்ட சபைப் பிரவேசத்தை எதிர்த்து வந்த ஒருவருக்குச் சட்ட சபையிடமே முறையிட நேர்ந்ததும் அதன் காரணமாகக் கவர்னரிடம் சென்று ஆதரவு கோர நேர்ந்ததும் ஒரு முரண்பாடுதான். ஆயினும் இதனைத் தவிர்க்க முடியவில்லை. கவர்னரைச் சந்திக்கப் போவதாகத் தேவதாஸுக்கு எழுதிய ஸி. ஆர்., ''என்ன அவமானம்! இருப்பினும் யதார்த்த நோக்கில் இதைச் செய்துதான் ஆகவேண்டும். எனக்குப் புதிர்களை விடுவித்துக் கொண்டிருக்க நேரமில்லை; நேரடியாகப் பிரச்னையை அணுகுகிறேன்'' என்றார்.

எவ்வாறாயினும் இதுவா அதுவா என்ற ஒரு தத்தளிப்பு இருக்கவே செய்தது. காங்கிரஸ் சட்ட மறுப்புத் திட்டத்தை ஏற்றுக் கொண்டிருக்கையில் சட்ட சபைகளை அணுகி ஆதரவு பெற முயல்வது சரியா? இந்தப் பிரச்னைக்குத் தீர்வு காண ஸி. ஆர். ஒரு வழி கண்டு பிடித்தார். தம்மைத் தாற்காலிகமாகச் சட்ட மறுப்பு இயக்கத்திலிருந்து விடுவித்துக் கொண்டார். எரவாடா சிறைச் சாலையில் இந்தக் கேள்வியை எழுப்பி மகாத்மாவுடன் விவாதிக்கையில் ஸி. ஆர். சொன்னார்: ''நான் சட்ட மறுப்பு இயக்கத்திலிருந்து வெளியேறினால்தான் ஹரிஜன இயக்கம் செயல்படும் என்றால் நான் வெளியேறவே விரும்புகிறேன்.'' காந்தி பதிலளித்தார்:

''நீ உணர்ச்சி வசப்படாமல், சுதந்திரமாகச் சிந்தித்துப் பார். அதன் பிறகு, இந்த ஹரிஜன இயக்கத்தில் நீ மட்டுமே என் பிரதிநிதியாக இருந்து பணியாற்ற முடியும் என்று உணர்ந்தால் நீ இதனைத் தெய்வத்தின் தெளிவான குரலாக ஏற்று, பொதுஜன விமர்சனங்களைப் பற்றிக் கவலைப் படாமல் இந்தப் பணியைத் தொடரத் தான் வேண்டும்.

''தங்கள் மனத்தில் சிறிதளவேனும் சந்தேகம் இருக்குமானால் அப்படிப்பட்டவர்கள் அச்சந்தேகத்தைத் தங்கள் முதல் பிரதிக்ஞையான சட்டமறுப்பு இயக்கத்துக்கே சாதகமாக்கிக் கொள்ள வேண்டும். ஆனால் தெளிவான தெய்வக் குரல் உங்கள் உள்ளத்தில் ஒலிப்பதை உணர்வீர்களானால் — அவ்விதம் நீங்கள் உணர்வது போல்தான் எனக்குத் தோன்றுகிறது. நீங்கள் ஹரிஜனப் பணியில்தான் ஈடுபட வேண்டும்.''

## 42. தோல்வியிலும் வெற்றி

சுப்பராயன் மசோதாவைத் தாக்கல் செய்ய வைஸ்ராய் அனுமதி மறுத்துவிட்டார். ராஜதானிகள் மத சம்பந்தப்பட்ட விஷயங்களில் அதிகாரம் செலுத்த முடியாது என்று தீர்ப்பு வழங்கி விட்டார். அவரது இந்தத் தீர்ப்பு, ஆசாரக் கொள்கைகளைப் பலப்படுத்தவும் காங்கிரஸைப் பலவீனப்படுத்தவும் அவர் ஆசைப்படுவதை ஸி. ஆருக்குப் புலப்படுத்தியது.

இப்போது புதுதில்லி சட்ட மன்றம் போராட்டக் களமாக மாறியது. அங்கே தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதியான ரங்க அய்யர், ஸி. ஆர். கேட்டுக் கொண்டதன் பேரில் இரண்டு மசோதாக்களைத் தாக்கல் செய்தார். ஒரு மசோதா தீண்டாதாருக்கும் மற்றோருக்குமிடையே ஏற்றத் தாழ்வுகளையும், தீண்டாதாருக்கு இல்லாத சலுகைகள் மற்றவர்களுக்குக் காட்டப்படுவதையும் தடை செய்ய முற்பட்டது. சென்னையில் தாக்கல் செய்ய முடியாமல் போன மசோதாவின் நலன்களை அனைத்து இந்தியாவுக்கும் அளிக்க இரண்டாவது மசோதா முற்பட்டது. இரண்டாவது மசோதாவைத் தாக்கல் செய்யலாம் என வைஸ்ராய் ஜனவரி இறுதியில் ஒப்புதல் அளித்தார்.

சட்ட சபை அங்கத்தினர்களின் ஆதரவை இம்மசோதாவுக்குப் பெறுவதற்காக ஸி. ஆர். டில்லிக்குச் சென்றார். அவர் பணி சிரமமானதாக இருந்தது. ஆசாரக்காரர்கள் எதிர்ப்புத் தெரிவித்தனர். எரவாடா ஒப்பந்தத்தைத் தயாரிக்க மாளவியா உதவி இருந்த போதிலும் இப்போது அவர் இந்த மசோதாவுக்கு எதிரா யிருந்தார். அது மட்டுமல்ல, 'தீண்டாதார்' பலரே ஆலயப் பிரவேசத்தில் ஆர்வம் காட்டவில்லை. அம்பேத்கார் இந்த மசோதா விஷயத்தில் தாம் உற்சாகமாக இல்லை என்று கூறினார். சட்டசபையில் இருந்த முஸ்லிம்கள் இந்தச் சீர்திருத்தத்தை ஆதரிப்பதா அல்லது ஹிந்துக்கள் தங்களுக்குள்ளே சண்டை போட்டுக் கொள்வதைச் சும்மா பார்த்துக் கொண்டிருப்பதா என்பதில் தெளிவற்றிருந்தார்கள்.

இப்படி மசோதாவுக்குச் சாதகமற்ற சூழ்நிலை நிலவிய போதிலும் அரசு அதற்கு ஒரு வாய்ப்புத் தந்திருந்தால் அது நிறைவேறியிருக்கலாம். ஆனால் அரசு மசோதாவை விவாதத்துக்கு ஏற்பதற்கே



முட்டுக்கட்டைகள் போட முயன்றது: அதன் பிறகு அதனை எதிர்க்க ஊக்கம் அளித்தது. அதே 1934ம் ஆண்டில் சில காலம் சென்று முடிவு தெரிந்தது. பரிதாபகரமான முடிவு அது. ஆசாரக்காரர்களின் வற்புறுத்தலுக்கு வளைந்து கொடுத்துத் தடுமாறி ரங்க அய்யர் மசோதாவை வாபஸ் பெற்றுக் கொண்டு விட்டார்.

ஆனால் சட்ட சபைக்கு வெளியே இம்மசோதா சமூக ரீதியிலும் அரசியல் ரீதியிலும் பயன் தந்தது. இதையொட்டி நடந்த விவாதங்கள் ஹிந்து மதச் சீர்திருத்தத்தின் அவசியத்தை உணர்த்தி அப்பிரச்னையை ஜீவனுள்ளதாக்கி யிருந்தது. அரசியல் ரீதியாகவும் அம்மசோதா உபயோகமாயிருந்தது. எப்படியெனில் தடையுத்தரவுகள், தடுப்புக் காவல் சட்டங்கள், தணிக்கை முறைகள் முதலியன வெளிப்படையான போராட்டத்தை இயலாததாக்கி விட்டிருந்தபோது, இம்மசோவுடன் காந்தியும் ஸி. ஆரும் தொடர்பு கொண்டிருந்த காரணத்தால் காங்கிரஸ் இன்னும் செயல்பட்டுக்கொண்டு தான் இருக்கிறது என்பதற்கு ஓர் அடையாளமாயிற்று.

ஹரிஜன இயக்கத்தையோ ஸி. ஆர். இம்மசோதாவிலேயே தம் முழுக் கவனத்தையும் செலுத்தி வந்ததையோ எல்லாக் காங்கிரஸ்காரர்களும் வரவேற்று விடவில்லை. சீர்திருத்த இயக்கமானது அரசியல் போராட்டத்திலிருந்து தொண்டர்களை இழுத்துக் கொண்டு போய்விடும் போல் தோன்றியது. இன்னும் சிறையிலேயே இருந்த ஜவாஹர்லாலுக்கு ஸி. ஆரின் சட்டசபை முயற்சிகள் விநோதமாகவும் பழிப்புக்கு உரியனவாகவும் தோன்றின.

ஆசாரக்காரர்களோ தங்கள் தாக்குதலைச் சற்றும் குறைத்துக் கொள்ளவில்லை. நாளிதழ்களில் கடிதங்கள் ஸி. ஆரைத் தாக்கின. மகாத்மா நேருவுக்கு எழுதினார்: ''அவர்கள் என்மீது வீசுகிற வசவுகள் அற்புதமாயும் புதுமையாகவும் உள்ளன. இந்த உலகில் கெட்டவை, ஊழலானவை அனைத்தின் மொத்த உருவம் நான்தான்!''

ஸி. ஆரின் முயற்சிகளுக்கு ஆதரவாக காந்தி வாதாடினார். இது எதிர்பார்க்கக் கூடியதே. இன்னும் சிறைக் கைதியாக இருந்த போதிலும் ஹரிஜன் பத்திரிகையை ஆரம்பித்து நடத்த அவருக்கு அரசு அனுமதி வழங்கியது. ஹரிஜனில் சமூக சீர்திருத்த விஷயங்கள் மட்டுமே இடம் பெறும் என்று காந்தி தெளிவாக்கியிருந்தார். அதில் அவர் எழுதுகையில் ஸி. ஆரைத் தமது ''அதிகாரபூர்வமான பிரதிநிதி'' என்று வர்ணித்ததுடன், ''என்னை விடச் சிறப்பாக வாதாடி ஆதரவு சேர்ப்பவர்'' என்றும் கூறியிருந்தார். எம். எல். ஏக்களிடையே அவர் பாடுபட்டதை ''மிகவும் அத்தியாவசியமானது'' என்று குறிப்பிட்டார். ''இதில் முரண்பாட்டினைச் சில குறுகிய நோக்குக்காரர்கள் கண்டால் அவர்களது விமர்சனம் ஓய்ந்து மறக்கப்படும் வரை காத்திருக்க வேண்டியது தான்'' என்று இன்னொரு சமயம் அவர் சொன்னார்.

மசோதா தந்த வாய்ப்புக்களையும் அநுபவங்களையும் ஸி. ஆர். ரொம்பவும் ரசித்தார் என்பதில் சந்தேகமே கிடையாது. சட்டசபைகளைப் பகிஷ்கரித்துப் பழித்துரைத்த அவரே அச்சபை அங்கத்தினர்களிடையே இருந்தபோது தமக்கு நன்கு பழக்கப்பட்ட இடத்தில் இருப்பது போன்று மிக இயல்பாக நடந்து கொண்டார். சட்டசபை அங்கத்தினர்களுள் ஒருவரான எச். பி. மோடி தமது சகா ஒருவரிடம் ஸி. ஆர். பற்றிக் கூறும்போது, ''இந்த மனிதர் எல்லாரையும் முடுக்கி விடும் சக்தியை மட்டுமல்ல, வற்புறுத்தி இணங்கச் செய்யும் ஆற்றலையும் இறையருளாகப் பெற்றிருக்கிறார்'' என்று குறிப்பிட்டார். பிரபல எழுத்தாளர் போதன் ஜோஸப், 'எதிராளிக்கு மனமகிழ்ச்சி ஏற்படுகிற மாதிரி தமது கோரிக்கையை அமைத்துக் கொடுக்கும் ஆற்றல் ஸி. ஆருக்கு உண்டு' என்பதைக் குறிப்பிட்டு எழுதினார்:

''தமது நிர்வாகக் குழு அங்கத்தினரிடையில் பேசுமாறு வைஸ்ராய் ஸி. ஆரை அழைத்தால் போதும். பிறகு அரசாங்கம் தானே அந்த மசோதாக்களை ஏற்றுக் கொண்டு விடும்!''

ஸி. ஆர். தவறுகளும் செய்தார்: ஒரு தவறு எரவாடாவில் காந்தி குறிப்பிட்ட ஒரு விஷயத்திலிருந்து தொடங்கியது. ''ஆக, மசோதாக்கள் இந்தச் சட்டசபைக் கூட்டத் தொடரில் நிறைவேற்றப்பட முடியாதாகும்? அவை நிறைவேற முடியும், நான் மட்டும்....'' என்று மகாத்மா கூறியதாக மகாதேவ தேசாய் ஸி. ஆரிடம் தெரியப்படுத்தினார். கூறாமல் விடுபட்டுப்போன சொற்களை ஸி. ஆரால் அனுமானிக்க முடிந்தது. டில்லியில் அவர் சிலரிடம் பேசும் போது, மகாத்மா மற்றொரு உண்ணாவிரதம் மேற்கொள்வதற்கான சாத்தியக் கூறுகள் இருப்பதாகச் சொன்னார். இதன் காரணமாக மகாத்மாவின் கண்டனத்தையும் பெற்றார். தாம் அந்தரங்கமாகக் குறிப்பிட்ட ஒரு விஷயத்தை இவ்வாறு உபயோகித்தது உண்ணாவிரதத்தைச் சுயலாபத்துக்குப் பயன்படுத்துவதாகும் என்றார் காந்தி.

தமிழாக்கம்: வெ. ராஜேந்திரன்



''இவர் என் பங்குதாரர்.''
''ஓ! உங்கள் பிஸினஸ் கூட்டாளியா?''
''ஊஹும்! ஆபீசில் நான் டிபன் சாப்பிடும் நேரத்தில் பங்கு கேட்டுக் கை நீட்டுவார்!''



பின்டெக்ஸ்
'பக்கனீயர்' லுங்கிகள்
உல்லாச உவகை
அளித்திடும்
என் அக்காவிற்கு—
அவற்றை அணிய தணியா
ஆசை பொங்கும் எனக்கு.

மற்றும் பின்டெக்ஸ்
புடவைகள், வேட்டிகள்,
டவல்கள், படுக்கை விரிப்புகள்.

உங்களுக்கும்,
உங்கள் குடும்பத்திற்கும்.



தர நிர்ணயம்:
**பின்னி லிமிடெட்**
பின்டெக்ஸ் டிவிஷன்
சென்னை 600 001.

FDS BL 2969 TAM




# குதிரைக்கு எத்தனை கால்கள்?

'அம்ர பாலன்'

இஸபெல்லா—

ஆயிரமாயிரம் நேயர்களின் கனவுக்கன்னி அவள். பந்தய மைதானத்தில் அவளுடைய கால்களின் வலுவை, நம்பி, அவளுடைய கம்பீரத்தை நம்பி நூற்றுக்கணக்கில், ஆயிரக்கணக்கில் பணம் காகிதமாய்ப் பறக்கும்.

அந்த இஸபெல்லா — லட்ச ரூபாய்க் குதிரை செத்துப் போய்விட்டது.

நொண்டிக் குதிரைதான் சறுக்கி விழ வேண்டும் என்பதில்லை. இஸபெல்லா மாதிரி வாட்ட சாட்டமான, வாளிப்பான குதிரை கூடச் சறுக்கி விழும். தொடை முறிந்து போகும்.

ஆனால் நொண்டிக் குதிரை என்று அலைந்து திரிய விடாமல், அதன் சொந்தக்காரர்கள் 'இரக்க' மேலிட்டால் துப்பாக்கியின் நெருக்கமான ஒற்றை வேட்டால் தீர்த்து விடுவார்கள். கருணைக் கொலை!

இஸபெல்லாவின் குளம்புகள் ஒலிக்காத அந்தப் பந்தய மைதானம் பரவியிருந்த பசும் புல் வெளிகளையெல்லாம் எங்கோ விழுங்கிக் கொண்டு வறட்டுத்தனமாய்ச் சுட்டெரித்தது.

பந்தய மைதானத்தின் அனைத்து நுணுக்கங்களையும் கற்றுத் தேர்ந்து, உதகமண்டலம், பெங்களூர், கிண்டி என்று மாறி மாறி அலையும் அளவுக்கு வெறியேறி விட்டிருந்த ஜனார்த்தனன் முதன் முறையாகச் சிந்தனை வயப்பட்டார். குதிரையின் பரிதாபத்துக்குரிய அகால மரணம் அவரை வெகுவாய்ப் பாதித்திருந்தது.

அவரையும் அறியாமல் சட்டைப் பையைத் துழாவிய கையில் சில்லறைகளாக இரண்டு ரூபாய் முப்பத்தைந்து காசுகள் தேறின. தமக்குள் சிரித்தவராக பஸ் ஸ்டாண்டு பக்கம் நடையைக் கட்டினார். வாடகை, ஏற்கனவே கொடுத்திருந்த அட்வான்ஸில் சரியாகி விடும். ரெயில் டிக்கெட்டும் ஏற்கெனவே எடுத்தாகி விட்டது. வெறும் ஆளானாலும் கௌரவமாய்ச் சென்னை திரும்பிவிடலாம்.

மைதிலியிடம் வழக்கம் போல் இந்த முறை ஒப்புதல் வாக்குமூலம் தருவது பற்றி யோசிக்க வேண்டும்.

அடுத்த வாரம் கண்டிப்பாய் எல்லாப் பணத்தையும் மீட்டு விடுவேன் என்று ஜனார்த்தனன் சொல்லுகிற போதுகளிலெல்லாம் புன்னகையுடன் கேட்டு அதை நம்புகிற அளவுக்கு மைதிலியின் உள்ளம் பக்குவம் பெற்று விட்டது.

சிந்தனைப் பின்னல் ஒருபுறம் இழுத்த நேரத்தில் டஸ்ஸில் ஏறி அமர்ந்திருந்த ஜனார்த்தனனுக்கு கண்டக்டர் டிக்கெட்டுக்காகத் தட்டியபோதுதான் உணர்வு வந்தது.

மீண்டும் மீண்டும் பந்தய மைதானத்துப் படுகொலை அவரை உறுத்தியது. அவரையும் அறியாமல் வாய், "இஸபெல்லா" என்று ஆதாரத்துடன் அழைத்தது.

"நோ... ஐயாம் ஜோஸபின்" என்று தன்னை அறிமுகப்படுத்திக் கொண்ட அந்த நடுத்தர வயதுக்காரியைப் பார்த்துச் சற்று நேரம் தடுமாறினார் ஜனார்த்தனன். 'நான் உன்னைக் கூப்பிடவில்லை, என் ஆசைக்குரிய குதிரையை நினைத்துக் கொண்டேன்' என்று அவளிடம் — முன் பின் அறிமுகமில்லாத ஒருத்தியிடம் எதற்காகச் சொல்வது? எப்படிச் சொல்வது?

"ஸாரி! நான் தவறாக எண்ணிக்கொண்டேன். யு லுக் லைக் ஹர்..." — என்று ஒரு பொய்யைச் சொல்லிச் சமாளித்ததாய் எண்ணிக் கொண்டார் ஜனார்த்தனன்.

பஸ் குலுக்கலில் நின்றது. இறங்கினார்; மீண்டும் ஒரு தவறு. கண்ட எழுத்துக்களின் குழப்பம். பஸ் அல்சூரைத் தாண்டி ஐஸொலேஷன் ஆஸ்பிடல் வந்து விட்டது; அப்போதுதான் தெரிந்தது திரும்பி நடக்க வேண்டும், அரை மைல்.

சிந்தனைக் குழப்பங்களிலிருந்து மீள முடியாதவராய் ஜனார்த்தனன் நடக்கத் தொடங்கியபோது—

"ஸாரி! நீங்க எங்கே எறங்கணும்?"

எதையோ புரிந்து கொண்ட மாதிரி குறுக்கே வந்து நின்று கேட்டாள் ஜோஸப்பின் — அந்த பஸ்ஸில் வந்த பெண்,

---

அமெரிக்காவில் நியூ ஹாம்ஷையரிலிருந்து வெளியாகும் மான்செஸ்டர் யூனியன் லீடர் என்ற பத்திரிகையின் சந்தாதாரர்களுக்கு ஒரு சலுகை: அவர்களுக்கு நூறு வயது ஆகிவிட்டால் பின்னர் சந்தா செலுத்த வேண்டியதில்லை. வாழ்நாள் முழுவதும் பத்திரிகை இலவசமாக வந்து கொண்டிருக்கும்!

— எம். சிவசுப்ரமணியன்



மென்று விழுங்கி நிலைமையை விளக்கி விட்டு அவர் நடந்தபோது அவள் மீண்டும் தொடர்ந்தாள்:

''நீங்க ரொம்பவும் அயர்ந்து போய் இருக்கீங்க. இஃப் யூ டோண்ட் மைண்ட்... கொஞ்ச நேரம் என் வீட்டுக்கு வரலாம்.''

அன்பா, பரிவா? இல்லை வேறு ஏதாவது 'விவகாரமா?'—

புரிந்து கொள்ளும் சக்தியை யெல்லாம் இழந்தவராய், அவளுடன் நடந்தார் ஜனார்த்தனன். அந்த நேரத்தில் அவள், அவளுடைய பேச்சும் தோழமையும் அவருக்கு அவசியமாகக் கூடப் பட்டது.

''மிஸ்...இஸபெல்லா பெண்ணின் பெயரில்லை. என் அபிமானத்துக்குகந்த குதிரை. இன்று ஒற்றை வேட்டில் அது கொல்லப்பட்டு விட்டது. அந்த அதிர்ச்சி தாளாமல் அதன் நினைவாகவே இருந்த நான், வாய் விட்டு அப்படிக் கூவியிருக்கிறேன்...நீங்கள் உங்களை அழைத்ததாய் எண்ணிக் கொண்டீர்கள்...''

ஜோஸபைன் வீட்டின் அலங்காரமான அறையில் அமர்ந்து கொண்டு மனம் திறந்து அவளிடம் உண்மையைச் சொன்னபோது, அவள் வியப்பால் மலர்ந்தாள். புருவக் கோடுகள் மேல் நோக்கி அழகாய் வளைந்ததைக் கண்ட ஜனார்த்தனனுக்குச் சற்று நேரம் எல்லாமே மறந்து போனது போல் ஒரு பிரமை ஏற்பட்டது.

''இன்றிரவு இங்கேயே தங்கி இளைப்பாறி விட்டு....'' என்று அவள் அழைப்பு விடுத்தபோது ஜனார்த்தனன் சிலிர்த்துக் கொண்டார். அன்போ, பரிவோ மட்டுமில்லை 'விவகாரம்'தான் என்பதை உணர்ந்த நிலையில் அவர் மிகவும் குறுகிப் போனார்.

ஏற்கெனவே கொஞ்சம் மது உள்ளே போயிருந்த போதிலும் அவருடைய தெளிவு இன்னமும் கற்பிழக்காமலேயே இருந்தது.

''மிஸ்... மன்னிக்க வேண்டும். நான் தங்குவதற்கில்லை. நாளைக் காலையில் நான் வீடு செல்லா விட்டால் என் மைதிலி மிகவும் வேதனைப்படுவாள். மைதிலி குதிரையின் பெயரில்லை மிஸ்... அவள் என் மனைவி...''— நகைச் சுவையை உதிர்த்துவிட்ட பெருமிதத்தில் அவர் எழுந்திருந்தார். ஜோஸபின் மீண்டும் அழகாய்ச் சிரித்து அவரை அலைக்கழித்தாள்.

''அவசரப்படாதீர்கள் மிஸ்டர் ஜனார்த்தன்... எந்த வண்டியில் செல்லவிருக்கிறீர்கள்?''

''மெயிலில்தான்... இருந்தாலும் லாட்ஜுக்குப் போய் எல்லாவற்றையும் கணக்குப் பார்த்துவிட்டுப் புறப்பட நேரம் சரியாகி விடும்.''

மணி ஆறரை ஆகியிருந்தது. மீண்டும் ஒரு கோப்பையில் மதுவை ஜோஸபைன் ஊற்றியபோது அவரால் மறுக்க முடியவில்லை. பெயரளவுக்கு அதை எடுத்துப் பருகிவிட்டுப் பெரும் பகுதியைக் கீழே வைத்தார்.

செத்துப்போன குதிரை இஸபெல்லாவால் வந்த வினைதானே இதெல்லாம் என்று ஒரு புறம் கோபம் கூட வந்தது.

''அம்மா தாயே! நான் வெறும் ஆள்... பையில் கிடக்கும் எட்டணா நாலணாச் சில்லறையை விட வேறு எதுவும் இல்லாதவன்'' என்று சொல்லிவிடலாமா?

அழகான உடையும், ஆடம்பரமான சூட்கேஸும் தன்னைத் தவறான புள்ளி என்று





குழந்தைகள் ஆண்டான
இந்த வருஷத்தில் முக்கியமான நகரங்களில்
குழந்தைகளுக்காக தனியாக
நூல் நிலையங்களை ஏற்படுத்தி, அவர்களுக்கு
நல்ல நூல்களைப் படிக்கும்
ஆர்வத்தை அதிகரிக்கச் செய்யலாமே!

— பி. நாராயணன்.

நம்பி வைத்து விட்டனவோ என்று மயங்கினார். ஜனார்த்தனனைப் பொறுத்தவரை இவையெல்லாம் புது அனுபவங்கள்.

''மிஸ் ஜோஸபின்! நான் மிகவும் ஒழுக்கமானவன். குடிப்பேன், குதிரை ஆடுவேன். ஆனால் பெண் விஷயத்தில் மட்டும் ரொம்ப யோக்கியமானவன்...'— என்று சொல்லிவிட நினைத்துச் சொற்களை ஒலி வடிவில் உருவாக்க முயன்றபோது—

ஜோஸபின் கண்களில் அதுவரை இருந்த மகிழ்ச்சியெல்லாம் போய், நீர் திரையிட்டிருந்ததைக் கவனித்தார் ஜனார்த்தனன். அவளே தொடர்ந்து பேசினாள்:

''மன்னியுங்கள் மிஸ்டர் ஜனார்த்தனன்! ஒரு முக்கியமான காரியத்துக்காக உங்களைச் சற்று நேரம் நிறுத்தி வைக்க எண்ணுகிறேன். இன்னும் ஒரு மணி நேரத்தில் அவர் வந்து விடுவார். ''இஸபெல்லா'' என்று பஸ்ஸில் கூவியவுடனேயே நான் புரிந்து கொண்டேன். அப்புறம் நீங்கள் இங்கு வந்து எல்லாவற்றையும் சொன்ன பிறகு உங்களின் தேவை சற்றுக் கூடுதலாகவே அவசியமாகிறது. என்னைக் கண்டு வேறு வகையில் தயவுசெய்து பயப்படாதீர்கள்.'' அவள் விம்மலுடன் சொன்னபோது, ஜனார்த்தனன் வெட்கமும் வேதனையும் கலந்த அதிர்ச்சிக்குள்ளானார். கூடவே மகிழ்ச்சியும் மின்னலிட்டது.

''மிஸ்....அவர் என்றால்?'' — அவருடைய தயக்கத்தையும் மீறி அந்தக் கேள்வி உதிர்ந்து விட்டது.

''என்னுடைய வருங்காலக் கணவர். பெர்னாண்டஸ் என்கிற பெயரில் முன்னமேயே உங்களுக்கும் தெரிந்தவர் தான். இன்று சுடப்பட்ட 'இஸபெல்லா'வின் ஜாக்கியாய் இருந்தவர். அந்தக் குதிரையைச் சொந்தக் குழந்தை மாதிரி பாசத்துடன் வளர்த்துப் பயிற்சி அளித்தவர். இஸபெல்லாவின் மரணம் உங்களை ரஸிகர் என்ற அளவில்தான் பாதித்தது. ஆனால் அவரை?''

ஜோஸபின் மேலே தொடர முடியாமல் மீண்டும் விம்மினாள். வாசல் கதவு திறக்கும் ஓசை கேட்டது.

''இதோ வந்து விட்டார். அவருடைய துயரத்துக்கு நான் மட்டும் ஆறுதலாய் இருந்துவிட முடியாது. உங்களைப் போன்ற நண்பரின் பரிவும் தேவையல்லவா?''

ஜாக்கி பெர்னாண்டஸ், பொய்யான புன்னகையுடன், ''ஹலோ!'' என்று கரம் நீட்டியபோது, அவனுடைய கரங்களைப் பற்றிக் கொண்ட ஜனார்த்தனன் குழந்தையானார். விம்மினார்.

''மீட் மிஸ்டர் ஜனார்த்தனன்... உங்கள் இஸபெல்லாவின் மரணத்தால் வெகுவாய்ப் பாதிக்கப்பட்ட ஒரு நல்ல மனிதர். மீட்... மிஸ்டர் பெர்னாண்டஸ்.'' சம்பிரதாயமாக அவள் இருவரையும் அறிமுகப்படுத்தி வைத்தபோதும் ஜனார்த்தனன் மனத்துக்குள் அழுதார்.

'என்ன காரியம் செய்து விட்டாய் மனமே! ஒரு நல்ல உள்ளத்தின் பரிவையும், வெகுளித் தன்மையையும் சரியாகப் புரிந்துகொள்ள முடியாத அளவுக்கா நீ குழம்பிப் போய் விட்டாய்?'

மனத்தாலும் நினைக்கக் கூடாத சில தவறுகளை... நல்ல காலம் அவளிடம் வாய் விட்டு எதையாவது பேசி அவளுடைய மனக் கண்ணாடியிலிருந்திருக்கக் கூடிய தம் உருவத்தை உடைத்து விடாமல் இருந்தமைக்காகக் கடவுளுக்கு நன்றி கூறினார்.

சென்னையில் எங்கோ ஒரு குடியிருப்பில் இவருக்காகவே காத்திருக்கும் மைதிலி— அவருடைய மனைவளம்... அதற்குக் கிடைத்த பரிசாய் அமைந்த இந்த நிகழ்ச்சியைப் பற்றி அவளிடம் நிறையப் பேச வேண்டும் என்று எண்ணிக்கொண்டார் ஜனார்த்தனன்.

சற்று நேர ஆறுதல் உரையாடல்களுக்குப் பின் பெர்னாண்டஸின் கரங்களைக் குலுக்கி விடைபெற்றுக் கொண்டு, ஜோஸபின் என்கிற கபடமற்ற பெண்மையின் தூய அன்புக்குக் கையசைத்து விடைபெற்றுக் கொண்டு ஜனார்த்தனன் வெளியே நடந்த போது—

வானத்தின் நிர்மலமான விதானத்தில் நட்சத்திரங்கள் சின்னக் குழந்தையின் புன்னகை மாதிரி அழகாய்ச் சிதறியிருந்தன.

# நாலு பேரிடம் நாலு நூல்கள்



**புதுடில்லியில் நாலு பேரிடம் நாலு நூல்களைத் தந்துவிட்டு ஒரு வாரத்துக்குப் பிறகு சந்தித்தபோது:**

## தடுமாற்றங்கள் பதினைந்து

கன்னுட்சர்க்கஸ் பகுதியில் வசிக்கும் கல்லூரி மாணவி குமாரி வி. எஸ். மங்களம்:

**ப**தினைந்து சிறுகதைகளும் படிக்கச் சுவையாக உள்ளன. திருநெல்வேலித் தமிழில் பாமர மக்கள் பேசும் கொச்சைத் தமிழில் உரையாடல்கள் சித்திரிக்கப்படுகின்றன.

என் மனத்துக்கு மிகவும் பிடித்த கதை, ''ஆசீர்வதிக்கணும் பிதாவே''. ஒரு பிச்சைக்காரனை ஏமாற்றும் மற்றொரு பிச்சைக்காரன் மனம் திருந்தி, தன் பிச்சைக் காசுகளை மற்றொருவனுக்குக் கொடுக்கும் இக்கதை வித்தியாசமாக உள்ளது.

'காய்தல்' கதையில் வீட்டில் சமைக்க இல்லாது இருக்க, திருமண விருந்துக்குத் தன் குழந்தைகளை அனுப்பாத தகப்பன், பசி வந்திடப் பத்தும் பறந்து போகும் என்பதற்கேற்பத் தானே விருந்துச் சாப்பாட்டுக்குச் செல்வது, சற்று ஜீரணிக்கக் கஷ்டமானதுதான்!

'மயானகாண்டம்' கதையில் பிற பெண்களிடம் போகா மனிதரில்லை என்ற கருத்தை ஆசிரியர் கதா பாத்திரத்தின் வாயிலாக வெளிப்படுத்துகிறார். கதை பச்சையாக இருந்தாலும் நடைக்காகவும், கருத்துக்காகவும் பாராட்டலாம்.

சுவையான பொழுது போக்குப் புத்தகம். புத்தகத்தின் அட்டைப் படம் சுத்த அபத்தம்.

''தடுமாற்றங்கள் பதினஞ்சு'' ஆசிரியர்: ஏ. ஏ. ஹெச். கே. கோரி. கிடைக்குமிடம்: 50, ஸ்டேட் பாங்க் காலனி, மகாராஜ நகர், பாளையங்கோட்டை-627011 விலை ரூ. 5.

## சினிமாவில் சேர வேண்டுமா?

ராஜேந்திர பிரசாத் ரோடு பகுதியில் வசிக்கும் ஓய்வுபெற்ற போஸ்ட் மாஸ்டர் ஜெனரல் திரு எம். கே. தினதயாளன்:

சினிமாத் தொழிலில் பல பிரிவுகள் உண்டு. அவற்றில் சேர விருப்பமுடையவர்களுக்கு ஒவ்வொரு பிரிவைக் குறித்தும் தேவைகள், நுணுக்கங்கள் பற்றிக் கூறும் நூல் இது.

'லோ-பட்ஜெட்' படங்களைப் பற்றிய தகவல் சுவையாக மட்டுமல்லாது சிந்திக்கவும் வைக்கிறது. அதுபோல போலி (bogus) தயாரிப்பாளர்கள் பற்றிய சுவையான உண்மைகளை ஆசிரியர் கூறுவது ரசிக்கும்படியாக உள்ளது.

சினிமாத் தொழிலின் உண்மைச் சொரூபத்தைப் பல கோணங்களிலிருந்து ஆசிரியர் படம் பிடித்துக் காட்டுகிறார்.

முக்கியமான பல பகுதிகளை ஆசிரியர் விரித்துரைக்காமல் நுனிப்புல் மேய்வது போல மேலெழுந்தவாரியாகக் கூறியிருப்பது சற்று ஏமாற்றத்தைக் கொடுக்கிறது.

வழிகாட்டி நூல் என்ற அளவில் பாராட்டக்கூடிய முயற்சி.

''சினிமாவில் சேரவேண்டுமா?'' ஆசிரியர்: ரமணியன். வெளியீடு: நால்வர் பதிப்பகம், 213, கோவிந்தப்ப நாயக்கன் தெரு, சென்னை-600 001. விலை: ரூ. 2.

திருமதி விசாலம் நாகராஜன்



திரு எம். கே. தினதயாளன்



குமாரி வி. எஸ். மங்களம்



திரு ராமநாதன்



## தமிழக நாட்டுப் பாடல்கள்

ஆதர்ஷ் நகரில் வசிக்கும் குடும்பத் தலைவி திருமதி விசாலம் நாகராஜன்

பலவகையான நாட்டுப்புறப் பாடல்களின் தொகுப்பு இந்தப் புத்தகம். கிராமப் பகுதிகளில் பாடப்படும் தாலாட்டு, குழந்தைப் பாடல்கள், மற்றும் காதல், விவசாயம், கும்மிப் பாடல்களை இதில் ஆசிரியர் சிரமப்பட்டுத் தொகுத்துள்ளார். ஒவ்வொரு வகைப் பாடலிலும் கிராமிய மணம் கமழ்கிறது.

குழந்தைப்பாடல் பகுதியில் நிலாப் பாட்டுக்கள் கண்ணாமூச்சிப் பாடல்கள் போன்றவை ரசிக்கும்படியாக உள்ளன. அதேபோல் விவசாயப் பாடல் பகுதியில் உழவன்பேசுவது, போல உள்ள மழை வேண்டும் பாடல்கள், பஞ்சம் போக்கும் பாடல், அறுவடைப் பாடல்கள் முதலியன.

சிறப்பாகக் காதல் பாடல்களைச் சொல்ல வேண்டும். காதலன், காதலி இருவரும் சேர்வதும், பின்பு பிரிவில் ஏற்படும் சோகத்தை இருவரும் தனித் தனியே அனுபவித்துப் பாடுவதும் நெஞ்சை அள்ளுகின்றன.

இதைப் போல ஓடம் ஓட்டுதல், மீன் பிடித்தல், சலவைத் தொழில் செய்தல் போன்றவற்றில் ஈடுபடுவோர் தம் நிலையைக் கூறும் பாடல்கள் சுவையாக உள்ளன.

இறுதியில் வரும் ஒப்பாரிப் பாடல்கள் புத்தகத்தின் சுவையைப் பெரிதும் கெடுக்கின்றன என்பது என் சொந்த அபிப்பிராயம்.

தமிழக நாட்டுப் பாடல்கள்: தொகுத்தவர்: கவிஞர் மா. வரதராஜன். வெளியீடு: வானதி பதிப்பகம், தி. நகர், சென்னை-17. விலை: ரூ. 10.

## நான்

கரோல்பாக் பகுதியில் வசிக்கும் அலுவலக ஊழியர் திரு ராமநாதன் :

ஹரிநாராயண் ஆப்டே எழுதிய நாவலின் தமிழாக்கம் இப்புத்தகம்.

கதாநாயகரான பவாநந்தரின் வாழ்க்கையை அவரே சொல்லும் சுயசரிதையாக ஆசிரியர் நாவலை வளர்த்துள்ளார். கதையின் நடுவே ஆசிரியரின் சீர்திருத்தக் கருத்துக்கள் அதிகமாகத் தெரிகின்றன.

தொடக்கத்திலிருந்து இறுதிவரை நாவலை சிரமமின்றிப் படிக்குமாறு தமிழாக்கம் செய்தவருக்குச் சபாஷ் சொல்ல வேண்டும்.

பவாநந்தர் தேச பக்தராக மாறி நாட்டுப் பணியில் ஈடுபடுவது கதையில் அருமையான திருப்பம்.

பவாநந்தர், சுந்தரி ஆகியோரின் உண்மையான அன்பை ஆசிரியர் சித்திரிக்கும் விதம் மிகச் சிறப்பு. சுந்தரியின் பாத்திரத்தை இயற்கையாகவும் அழகாகவும் உருவாக்கியுள்ளார்.

இந்நாவல் மூலம் ஆசிரியர் பலதரப்பட்ட மனித இயல்புகளை அருமையாகக் காட்டியுள்ளார்.

கதை ரொம்பவும் நீளமாக வளர்க்கப் பட்டுள்ளது நாவலின் சுவையைப் பாதிக்கிறது. தேவையில்லாத நீண்ட வசனங்கள், வர்ணனைகள் ரொம்பவும் பொறுமையைச் சோதிக்கின்றன. பல கதாபாத்திரங்கள் அவசியமேயில்லை. தவிர்த்திருக்கலாம்.

''நான்''. மூலம்: ஹரிநாராயண் ஆப்டே, தமிழாக்கம்: மாலதி புணதாம் பேகர். வெளியீடு: நேஷனல் புக் டிரஸ்ட், புதுடில்லி. விநியோகம்: பாரி நிலையம், 1-59, பிராட்வே, சென்னை-1. விலை ரூ. 11-50.

பேட்டி: ''சிக்கி''

---

# வராத நோயாளிகள்!

(ஒரு தவணை முறை விற்பனை கடைக்கு எதிர் வரிசையில் டிஸ்பென்ஸரி வைத்துக் கொண்டு ஈ ஓட்டியபடி அமர்ந்திருந்த ஒரு இளம் டாக்டரிடம் கற்பனையில் வந்த நோயாளிகள்.)

வெயில் காலம் வந்துட்டா ஒரே தலைசுத்தல். நிற்கவே மாட்டேங்கிறது. என்ன செய்யலாம்? — மின் விசிறி

எப்பவும் வயறு நிறைஞ்ச கெடக்கறாப் பலே, ஒரே உப்புசம்... புஸ்... புஸ் ஸுன்னு மூச்சு வாங்கறது... காஸ் டிரபிளோ? — பிரஷர் குக்கர்

ஆகாரத்திலே ஒண்ணும் குறைவு இல்லே டாக்டர்! பாலும்.. பழமும்.. வெண்ணெயுமா எதேஷ்டம். என்ன புண்ணியம் சொல்லுங்கோ... எப்பவும் ஜன்னி கண்ட மாதிரி ஒடம்பு குளிர்ந்து வெறச்சுப் போய்க் கெடக்கேன். — ரிப்ரிஜிரேட்டர்

தொண்டையிலே எப்பவும் ஒரே கர கரப்பு... திடீர் திடீர்னு சத்தமே வராமே தொண்டை அடைச்சுப் போயிடறது.. டான்ஸில்லா இருக்குமோ டாக்டர்? — ரேடியோ



வேலை செய்ய ஆரம் பிச்சாபோதும். 'கருக் கருக்' குன்னு ஒரே குத்தல்... — தையல் மிஷின்

வயத்தை ஒரேடியாகக் கலக்கறது... இரைச்சல் வேறே சகிக்கலே. — மிக்ஸி

ஞாபக மறதி அசாத்தியம்... யார் என்ன சொன்னாலும் 'சட்'டுனு மண்டையிலே ஏற மாட்டேங்கறது. — ட்யூப் லைட்

எதையுமே கூர்ந்து பார்த்தாத்தான் தெரியறது.... லென்ஸ் மாத்தணுமோ என்னமோ... பாருங்க டாக்டர். —காமிரா

எஸ். பட்டம்மா

# புத்தகங் 'களுக்' கிடையே!

-கமல்-















# கடுகு பதில்கள்

✠ ஆனைகூத்தன், சென்னை-61

கே. சிரகம் என்று ஒரு பத்திரிகை தொடங்குவதாக உள்ளேன்....

பதில்: தனிரகமாக இருந்தால் சரி; 'சி' ரகமாக இருக்காதே?

✠ கீதா கந்தர், திண்டுக்கல்-1

கே. கல்வியையும் கலைமகளையும் இளைஞர்கள் வெறுக்கிறார்கள், போர் பத்திரிகைகள் என்று ஒரு பத்திரிகையில் கட்டுரை வந்ததே?

ப: ஆம். இவை போர் பத்திரிகைகள் தாம்; வாசிப்போர் பத்திரிகை, படிப்போர் பத்திரிகை, ரசிப்போர் பத்திரிகை!

✠ லட்சுமி செக்குருட்டுவன், வேலூர்

கே. ''பராசக்தி'' யார்?

ப: கொக்கி போடாத பராசக்தி பெண்; கொக்கி போட்ட ''பராசக்தி'' பெண் அல்ல!

✠ எஸ். ராமமூர்த்தி, அலகாபாத்

கே. இளம் எழுத்தாளர்களின் படைப்பை பாரபட்சமில்லாமல் படித்து சரக்கு இருந்தால் பிரசுரிக்கும் பத்திரிகை இருக்கிறதா?

ப: இன்று பத்திரிகைகள் பெருகிவிட்டன; ஆகவே நிறையக் கதை, கட்டுரைகள் தேவைப்படுகின்றன; புதுமுக எழுத்தாளர்களுக்கு நிறைய வாய்ப்புகள் உண்டு.



யாருடைய சிபாரிசுகளின் பேரிலும் கதைகளை யாரும் பிரசுரிப்பதில்லை. உங்கள் எழுத்தே உங்களுக்குச் சிபாரிசு செய்யும் படி இருக்க வேண்டும்.

✠ கிருஷ்ணன், பெங்களூர்-23

கே. ஜெயமாலினியின் ஆட்டத்தை ரசிப்பதுண்டா?

ப: சென்ஸார் செய்யாத படங்கள் 250க்கு மேல் பார்த்திருக்கும் எனக்கு அந்தப் படங்களே ரசிக்கவில்லை. ஜெயமாலினி ஆட்டமா ரசிக்கப் போகிறது?

✠ காமாட்சி சந்திரசேகர், பம்பாய்-19

கே. உண்மையென்றால் கதையில்லை, கதை என்றால் உண்மையில்லை. பின், உண்மைக் கதை என்றால் என்ன?

ப: அதில் 'உண்மை' பாகம் கதை. 'கதை' பாகம் உண்மை. (இண்டியன் மேட்ஃபாரின் விஸ்கி என்கிறார்களே அது மாதிரிதான் இதுவும்!)

✠ எம். காமராஜ், திருச்சி-5

கே. வெளிநாட்டுப் பயணக் கட்டுரை எழுதுபவர்களில் தங்களைக் கவர்ந்தவர் யார்?

ப: ஜார்ஜ் மைக்ஸ், பாப் ஹோப்.

✠ என். அளகப்பன், திருநெல்வேலி

கே. திரைப்பட விளம்பர டிசைன் வரைவதில் தங்களைக் கவர்ந்தவர் யார்?

ப: பரணியின் விளம்பரங்களில் கவிதை நயம் இருக்கும். ஈஸ்வரும் பளிச்சென்று செய்கிறார்;

✠ எஸ். வாசன், குன்னக்குடி

கே. உங்களுக்கு அதிர்ஷ்டத்தில் நம்பிக்கை உண்டா?

ப: உண்டு; அதிகமாக உழைக்க உழைக்க அதிக அதிர்ஷ்டம் ஒருவனுக்கு வருவதைப் பார்த்திருக்கிறேன்; உழைப்புக்கு அஞ்சாதவனே அதிர்ஷ்டசாலி!

✠ சரோஜினி ராஜன், தாதர்

கே. வாஷிங்டன் திருமணம் போன்ற நிறைந்த நகைச்சுவை நாவலை வேறு யாரும் எழுதவில்லையே?

ப: தமிழ் நாட்டில் ஒரு 'சாவி' தானே இருக்கிறார். என்னைக் கவர்ந்த எழுத்தாளர் பட்டியலில் அவர் பெயரைக் காரணத்தோடுதான் போடவில்லை. அவரது திறமையின் மேல் பொறாமை!




✠ சரஸ்வதி ராஜேந்திரன், மன்னார்குடி-2

கே. நாட்டை மறந்து வீட்டை நினைக்கும் தலைவர்கள் மிகுந்திருக்கிறார்கள் என்று அனந்தநாயகி கூறியிருக்கிறாரே?

ப: வீட்டை மட்டும் நினைக்கிறார்கள் என்பது சரியில்லை. 'வோட்டை' நினைக்கிறார்கள், 'சீட்'டை நினைக்கிறார்கள். தங்கள் வயிற்றுப்பாட்டை நினைக்கிறார்கள். பண கேட்டைப் பற்றி நினைக்கிறார்கள்!

பரிசு பெறுபவர்:

**எஸ். ராமமூர்த்தி,**
**டெல்கோ பிரதிநிதி, ஆடோ ஸேல்ஸ்**
**பில்டிங், பி.டி. டாண்டன் ரோடு,**
**அலகாபாத், 211001.**

Printed by V. Murali and published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd., at the Bharathan Press, Guindy, Madras-600 032. Editor: K. Rajendran

